# Nūrul Islām

## Malar 3, itaḻ 6

## April 1942

Record no. 2621




பிஸ்மில்லாஹ்

# நூருல் இஸ்லாம்

(ஓர் உயரிய செந்தமிழ் மாசிகை)

# NOOR-UL-ISLAM

ஆசிரியர் : A. N. ஹாபிஸ் முஹம்மது யூசுப் (பாஜில் பாகவி)

மலர் - 3 | ஹிஜ்ரீ 1361௵ ரபீவுல்ஆகிர்மீ கி. பி. 1942௵ ஏப்ரல்மீ | இதழ் - 6


## சற்குணப்பிரம்மம் அல்லது ஸிபாத்துல்லாஹ்
## SARGUNA BRAHMAM or SIFATHULLAH

"அல்லாஹ் வாகிய அவன் காற்றை அனுப்பிவைக்கிறான். அது மேகங்களைக் கலைத்து விடுகிறது. பின்னர் வானமெங்கும் அதை (அல்லாஹ் எண்ணியபடி) பரவும்படிச் செய்கிறான். (சில விடங்களில் கருநிறமாகவும் அடர்த்தியாகவும், சில விடங்களில் வெண்மையாகவும் இலேசாகவும் தென்படும்.) மேலும் அதைப் பற்பலத் துண்டுகளாகவும் செய்துவிடுகிறான். பின்னர் அதினுள்ளேயிருந்து மழை வெளிப்படுவதை நீர் பார்க்கின்றீர். எனவே, (அல்லாஹ்) தனது அடியார்களுள் நாடியவர்களுக்கு அம்மழை வந்து கிடைக்கும்போது அவர்களெல்லாம் அதிக சந்தோஷமுள்ளவர்களாய்ச் சமைகின்றனர். மேலும் (இத்தகைய மழை) அவர்கள்பால் இறக்கப்படுவதற்குமுன் அவர்களெல்லாம் நம்பிக்கையற்றவர்களாகவும், மனமுடைந்துபோனவர்களாகவுமே இருந்து வந்தனர்."

(30 : 48)

"அல்லாஹ்வாகிய அவன் (மிக மிகக்) கேவலமான நிலைமையிலிருந்து உங்களைச் சிருட்டித்தான். பலஹீனமாயிருந்ததற்குப் பின் (நுங்களுக்குப்) பலத்தை (சக்தியை) அளித்தான். பின்னர் (உங்களை அப்படியே விட்டுவிட்டானில்லை.) பலசாலிகளானதன்பின் இயலாமையுள்ளவர்களாகவும், வயோதிகர்களாகவும் (நுங்களைச்) செய்தான். (எனவே) தான் நாடியதை அல்லாஹ் சிருட்டிக்கின்றான். மேலும் அவன் (சர்வ வஸ்துக்களையும்) பூரணமாய் அறிகிறவனாக (சர்வ கிரியைகளின் மீதும்) வல்லமையுள்ளவனாக யிருக்கிறான்."

(30 : 54)

"அல்லாஹ் வாகிய அவன் நீங்கள் கண்ணுறுவதேபோல் ஸ்தம்பங்களின்றியே வானங்களைச் சிருட்டித்துள்ளான். மேலும் பூமியானது நுங்களைக் கொண்டு எப்பக்கமேனும் சாய்ந்து விடாமலிருக்கும்பொருட்டு முளைகளை (மலைகளை) அறைந்துள்ளான். (இதுமட்டுமா?) மேலும் அதில் ஊர்ந்து திரிவனவற்றை (ச்சிருட்டித்துப்) பரத்தியுள்ளான். இன்னும் வானத்தினின்றும் ஜலத்தை நாம் இறக்கினோம். பின்னர் அதில் (பூமியில்) ஜோடிகளாயுள்ள சர்வ பொருட்களையும் நடக்கும்படிச் செய்தோம் (என்பது ஞாபகத்திலிருக்கட்டும்)." (31 : 10)

"ஏ மானிடர்காள்! இஃது (மேற் குறிப்பிட்டவைகள்) அல்லாஹ்வுடைய சிருட்டிகளாகும். எனவே, அவனன்றி வேறெவரும் வேறெதையேனும் சிருட்டித்துள்ளதை எடுத்துக்காட்ட எவரேனும் முன் வருவீர்களா? (ஆகவே அல்லாஹ் அல்லாமல் மற்றவர்களுக்கு நீங்கள் அஞ்சி நடந்து வணக்கம் புரிவது அநியாயமும் அக்கிரமும் நிறைந்த செயலேயாகும்.) இல்லை; அக்கிரமக்காரர்கள் விளக்கமான கோடிய வழி கேட்டிலேயே இருக்கின்றனர்." (31 : 11)

"(லுக்மான் தனது மைந்தருக்குச் சொன்ன விஷயத்தை நினைவு கூறுங்கள்.) ஏ மைந்தா! நீர் செய்யக்கூடிய நற்காரியம் எள்ளைப் போன்றசிறிய வித்தளவேயாயினும், அதுவும் பாறைக் கற்குள் மறைந்திருப்பினும், அல்லது வானங்களில் எங்கேனுமோர் இடத்திலிருப்பினும், அல்லது பூமியிலேயே யிருப்பினும் நிச்சயமாகமே அதை அல்லாஹ் தீர்ப்புநாளில் கொண்டு வந்து விடுவான். (எனவே, எத்தகைய காரியத்தையும் அவனுக்கு மறைத்து வைப்பது முடியாது. என்னெனின்,) அல்லாஹ்வானவன் அதி நுட்ப ஞானியாய் ரகசியமுணர்பவனாயிருக்கிறான்." (31 : 16)

"வானங்களிலும் பூமியிலுமுண்டான சர்வமும் அல்லாஹ்வுக்குரியனவாகவே யிருக்கின்றன. நிச்சயமாகவே அல்லாஹ் வாகிய அவன் (உங்கள்பால்) தேவையற்றவனாக புகழுக்குரியவனாக யிருக்கிறான்; (மனிதர்களெல்லாம் மீண்டுமொரு விஷயத்தைக் கவனித்தல் வேண்டும்.) பூமியில் உண்டான மரங்களெல்லாம் எழுது கோலாய் ஆக்கப்பட்டு கடல் (முழுதும்) மையாக ஆக்கப்பட்டு இதற்குப்பின் ஏழு கடல்கள் மையாக ஆக்கப்பட்டாலும் அல்லாஹ்வின் வார்த்தைகள் (அவனுடைய பூரண அம்சங்கள்) முடிவடையப்போவதில்லை. நிச்சயமாகவே அல்லாஹ் வன்மையுள்ளவனாக ஞானம் நிறைந்தவனாயிருக்கிறான்." (31 : 26, 27)

"இங்ஙனம் அல்லாஹ் வாகிய அவன் ஒருவனே உண்மையானவனாக (சத்தியமானவனாக) இருக்கிறான். அவனல்லாமல் அவர்கள் அழைக்கின்றவைகள் (விக்கிரகங்கள் போன்றவை) பொய்யானவையாயிருக்கின்றன. மேலும் அல்லாஹ் வாகிய அவன் மகாபெரியவனாக உயர்ந்தவனாயிருக்கிறான்." (31 : 30)

"(இறுதிநாளான கியாமத்தின்) அச்சமயத்தின் ஞானமும் மழையை எப்போழுது இறக்கி



வைப்பானென்பதும் (மாதர்களின்) கர்ப்பக் கோளறைகளுக்குள் யாதுளதென்பதை அறிவதும் அல்லாஹ்விடமே இருக்கின்றது. இன்னம் எம்மனிதனும் நாளை என்ன சம்பாதிப்போமென்பதை (முற்கூட்டியே) அறிவதற்கில்லை. இன்னமும் (இப்படியே) எம்மனிதனும் தான் பூமியின் எந்த பாகத்தில் மரணமடைவான் என்பதையும் (முற்கூட்டியே) அறிவதற்கில்லை. (ஆனால் மேற் குறிப்பிட்ட ஐந்து அம்சங்களின் ஞானத்தையும் விஷயத்தையும் அல்லாஹ் பூரணமாய் அறிந்தவனாயிருக்கிறான்.) என்னெனின், அல்லாஹ் வானவன் நுண்ணறிவுள்ளவனாக அதிகமறிந்தவனாக யிருக்கிறான்." (31 : 34)

"அல்லாஹ் வாகிய அவன் வானங்களையும் பூமியையும் அவ்விரண்டுக்கு மிடையே உண்டானவைகளனைத்தையும் ஆறு நாட்களில் சிருட்டித்தான். பின்னர் அர்ஷின் (மாபெரும் சிம்மாசனத்தின்) மீது நிலையானான். அவனல்லாமல் உங்களுக்கு எத்தகைய எஜமானனும் (சிநேகிதனும்) வேறு எத்தகைய பரிந்து பேசுபவரும் (பச்சாத்தாபப்படுபவரும்) இல்லவேயில்லை. (இதைக்கொண்டு) நீங்கள் உபதேசம் பெறுதல் வேண்டாமா? வானத்தினின்றும் பூமிவரை உண்டான (சர்வ) காரியங்களையும் அவன் நடத்திக்கொண்டு வருகிறான். பின்னர் நீங்களெல்லீரும் எண்ணிப்பார்ப்பதுபோல், ஆயிரம் ஆண்டுகளைப் போலுள்ள நேரம் கொண்ட ஓரே நாளில் அவன்பால் எல்லாம் போய்ச் சேரப்போகிறது (என்பதையும் ஆய்ந் தோய்ந்து கவனித்துப் பார்க்க வேண்டாமா). அவ்வாண்டவன் எத்தகையோனெனின் (அவன்) மறைவானதையும் பகிரங்கமானதையும் அறிகிறவனாயிருக்கிறான் (அல்லாமலும் அவன் அருளாளனாய் வன்மை மிக்கவனாயிருக்கிறான்). அவ்வாண்டவன் சர்வ வஸ்துக்களையும் அவற்றிற்குரிய சிருட்டியை மிகமிக அழகாய்ச் செய்திருக்கிறான்." (32 : 4, 5, 6, 7)

"நாம் நாடுவோமாயின் ஒவ்வொரு ஆன்மாவுக்கும் அதற்குரிய நேரான வழியை அளித்து விடுவோம். (ஆனால் ஒவ்வொரு ஆன்மாவும் தன் செய்கையின் காரணத்தால் அதற்குத் தக்கவாறு முதன் முதலாய்த் தன்னைப் பண்படுத்திக்கொண்டிருத்தல் வேண்டும். எந்த ஆன்மாவும் நற்கிரியைகளைச் செய்துத் தன்னைச் சீர்படுத்திக் கொள்ளாத வரை சுயமே நாம் நல்வழி காட்டுவதென்பது நடக்காத காரியமே யாகும்.)" (32 : 13)

"(வன்மைமிக்க) அல்லாஹ்வானவன் உண்மையைச் சொல்லும் விஷயத்தில் எத்தன்கய வகையிலும் வெட்கப்படுவதில்லை. (எனவே, நீங்களெல்லீரும் விஷயம் எத்தகையதாயினும் உண்மையாயிருப்பின் அதைப் பகிரங்கமாய்ச் சொல்லும் விஷயத்தில் யாருக்கும் வெட்கப்படவேண்டிய அவசியமில்லை.)" (32 : 53)

"நீவிர் எதேனுமொரு வஸ்துவை வெளிப்படுத்திடினும் அல்லது அதை நீங்கள் மறைத்திடினும் (இவை அல்லாஹ்வுக்குத் தெரியாமலிருக்கப்போவதில்லை. என்னெனின்) நிச்சயமாகவே அல்லாஹ் வானவன் சர்வ வஸ்துக்களையும்

பரிபூரணமாய் அறிகிறவனாயிருக்கிறான். (33 : 54)

“பூமியில் நுழைந்துகொண்டிருப்பதையும் அதினின்றும் வெளிப்பட்டிருப்பதையும் வானத்தினின்றும் இறங்குகின்ற அதையும் அதில் எறிச் செல்லுகின்ற அதையும் (அல்லாஹ் வாகிய அவன் நனி) அறிகிறான். மேலும் அவன் (மக்களின் பாவங்களை அதிகமதிகம்) மனனிப்பவனாக அருளாளனாக இருக்கிறான்.” (34 : 2)

“(அல்லாஹ்) மறைவானவற்றை அறிகிறவனாயிருக்கிறான். வானங்களிலும் பூமியிலும் உண்டான அணுப்பிரமாண வஸ்துவும் அவனை விட்டும் மறைவானதாயில்லை. இதைக்காட்டினும் அதிகமதிகம் சிறியதோ அதிகமதிகம் பெரியதோ (அல்லாஹ்வின்) விளக்கமான ஏற்பாட்டில் காணப்படாமல் ஒன்றுமேயில்லை. (எல்லாம் அல்லாஹ்வின் ஏற்பாடான சட்ட திட்டங்களுக்குள் அமைந்து அவனெதிரே நன்கு துலக்கமாகவே இருக்கின்றன. எனவே, அவனுக்கு எந்த வஸ்துவும் எந்தவகையாலும் தெரியாமல் மறைந்துகொண்டிருக்கிறதென்பது இல்லவே யில்லை)” (34 : 3)

“(ஏ நபியே!) சொல்வீராக: நிச்சயமாகவே என் இரட்சகன், தான் நாடியவர்களுங்கு உணவு வகைகளை தம் ஏற்பாட்டின்படி அதிக தாராளமாய் விரிவாய்க் கொடுக்கிறான். ஆனால் மனிதர்களுள் பெரும்பாலோர் (இதை) அறிகின்றவர்களாயில்லை.” (34 : 36)

“(ஏ நபியே!) சொல்வீராக: நிச்சயமாகவே எமது இரட்சகன் அவன் அடியார்களுள் நாடியவர்களுக்கு உணவு வகையைத் தாராளமாய்க் கொடுக்கிறான். மேலும் (தன் அடியார்களுள்) சிலருக்கு (உணவு வகையை) குறுக்கவும் செய்கிறான். மேலும் ஒரு வஸ்துவை நீவிர் (அல்லாஹ்வுக்காக) செலவழிப்பீராயின், அதற்குள் (நன்மையோன) பகரத்தை (அல்லாஹ்வாகிய) அவன் அளிக்கின்றான். எனவே, அவன் இரணமளிப்பவர்களுள் மிகமிகச் சிறந்தவனாயிருக்கிறான்.” (34 : 39)



“நூருல் இஸ்லாம்”

ஜீவிய சந்தா ரூ. 100—0—0
போஷக சந்தா ரூ. 25—0—0
இந்தியா, ஸிலோன் நாடுகளுக்கு ரூ. 3—0—0
மாதிரிப் பிரதி (தபால் செலவுடன்) 0—5—0

விளம்பர விகிதம்

1 பக்கத்துக்கு 1 மாதம் மட்டும் ரூபா 25
½ ” ” ரூபா 15

[குறிப்பு :— சந்தாவோ, விளம்பர சார்ஜோ எதுவும் முன்பணமாகவே அனுப்பப்பட வேண்டும்.] நூ. இ. மானேஜர்.

NOOR-UL-ISLAM

நூருல்-இஸ்லாம்

"نورالاسلام" مدراس

# அரசியலில் துருக்கியும் முஸ்லிம் லீகும்

## TURKEY & MUSLIM LEAGUE IN POLITICS.

நண்பர்களே, மேற்கண்ட தலையங்கத்தைக் கண்டதும் வியப்படைய வேண்டாம். அப்படியே ஆச்சரியப்பட வேண்டிய அவசியமுமில்லை. சுமார் இருபது ஆண்டுகளுக்குமுன் துருக்கியில் உதுமானிய அரசாங்கம் நடந்துகொண்டு இருந்தக்கால், அது ஐரோப்பாவை யொட்டிய வியாதியுள்ள ஓர் அரசாட்சி யெனக் கூறப்பட்டு வந்தது. இதே முறையில் நாம் வசிக்கும் இவ் விந்தியாவில் சுமார் ஐந்து ஆண்டுகளுக்கு முன் அகில இந்திய முஸ்லிம் லீக் இருந்தே வந்ததாயினும், அஃது என்ன சபை, அதன் நோக்கமென்ன, அஃதெங்குளது என்பதை இந்திய முஸ்லிம்கள் பெரும்பாலும் அறியாமலிருந்தார்களென்றால் அது மிகையாகாது. இஃதிங்ஙன மிருக்க.

தற்சமய துருக்கியின் நிலைமையைக் கவனித்துப் பாருங்கள்: கி. பி. 1922-ல் துருக்கிக்குப் புத்துணர்ச்சி யளித்த வீரராம் அத்தாதுர்க் முஸ்தபா கமால் (எல்துரும்) உதுமானிய அரசாங்கத்தை ஒழித்துச் சரியான நாகரிகமுள்ள உயர்ந்த அரசியல் துறையைக் கைப்பிடித்த நவீன துருக்கியை ஸ்தாபித்தார். இது சமயமோ இவ்வுலகில் எவரும் தற்கால துருக்கி அரசாங்கமானது வியாதியுள்ளது, பலயீனமடைந்தது, ஏமாற்றப்படலாயக்கானது, தனக்குச் சுயமே

எத்தகைய சக்தியும் கிடையாதது என்று நாவினால் சொல்லவும் அச்சப்படுகின்றார்கள். காரணமென்னவெனின், தற்கால துருக்கியானது எவரையும் கண்டு அஞ்சுவதாயில்லை. அங்கு காணப்படும் சிறியார் பெரியார் வாலிபர் வயோதிகர் இராணுவத்தினர் உள்பட எல்லோரும் தங்களை எஃகினால் செய்யப்பட்ட உறுதியான மனத்துடைய மனிதர்களென்றே நினைத்துக் கொண்டிருக்கின்றனர். வெறும் நினைவுமட்டுமல்ல; சமயம் கிட்டும்போது அவர்களெண்ணப்படி வீரத்தையும் தீரத்தையும் காட்டி அபாரமான அரிய சேவையையும் அதி எளிதில் துணிந்து செய்தும் முடிக்கின்றனர். கி. பி. 1922-க்குப் பின் நடந்திருக்கும் துருக்கி அரசாங்கத்தின் புதிய சரிதையை நன்குணர்ந்த நண்பர்கள், இஃதுண்மையென எவ்விதத் தங்குதடையுமில்லாமல் உடனே ஏற்றுக்கொள்வர் என்பது திண்ணம்.

தற்சமய உலகமானது, நிகழ்ந்துகொண்டிருக்கும் யுத்தக் குழப்பத்தின் காரணமாய் ஆகாயத்திலும், கடலிலும், தரையிலும் அமைதியற்றதாய் எங்கும் ஒரே பரபரப்பாய்க் காணப்பட்டு நிற்கிறது. இத்தகைய சந்தர்ப்பத்திலும் துருக்கித் தலைவரும் அவரைத் தாங்கி நிற்கும் அத்தேய மக்களும், கிணற்றில் விழுந்த கல்லைப்போல் அமைதியுடன், ‘நாங்கள் நடு நிலைமையே வகிக்கிறோம், இனியும் வகித்தே வருவோம்’ என்று மகா சாந்தத்துடன் கூறிக்கொண்டு அதன்படி நடந்துகொண்டும் வருகின்றனர். இதற்குப் பின்னர் வாசக நேயர்கள் மீண்டுமொரு விஷயத்தைக் கவனித்தல் வேண்டும். அஃதாவது:—

1939-ஆம் ஆண்டில் அகாரணமாய் ராக்ஷஸ முறையில் யுத்தத்தை ஆரம்பித்த ஹிட்லர், ஸ்விஸ், ஸ்பெயின், போர்ச்சுகல், ஸ்வீடன், பின்லாந்து ஆகிய தேச பாகங்களைத் தவிர்த்து, ஐரோப்பாவை அடைத்துக் கொண்டிருந்த இதர எல்லா அரசாங்கங்களையும் ஒன்றன்பின் மற்றொன்றாய்க் கபளீகரம் செய்துகொண்டே வந்துள்ளார். இதில் அவர் கைப்பற்றிக்கொண்ட அனேக நாடுகள், ‘நாங்கள் யுத்தத்தில் சேரத் தயாராயில்லை; எவர் பக்கமும் சேராமல் நடு நிலைமையாகவே இருப்போம், இருக்கிறோம்’ என்றே கூறிக்கொண்டிருந்தன. ஆனால் ஹிட்லரின் செவியில் இஃது ஏறவில்லை. நடு நிலைமையோ இறுதி நிலைமையோ ஆதி நிலைமையோ அதைப்பற்றி எமக்குக் கவலை யில்லை; உங்களுடைய தேச பாகங்கள் எனது ஜேபிக்குள் வந்து விட வேண்டுமென்றே ஒவ்வொன்றாய்ப் பிடித்துப் போட்டுக்கொண்டே வந்துவிட்டார். இறுதியில் தான்சங்கடப்படுவதற்கான அல்லது தோல்விக்கு அஸ்திபாரமான ரஷ்ய யுத்தத்தை ஆரம்பிப்பதற்குமுன், அல்பேனியா, கிரீஸ், கிரீட், ஆகிய துருக்கி எல்லைக்குப் பக்கத்திலுள்ள ஐரோப்பிய நாடுகளையும் தன்வசப் படுத்திக்கொண்டார்.

இத்தகைய அபாரமான மிருக பலம் பூண்ட ஹிட்லர், துருக்கியின் எல்லையான மாரிட்ஜா Maritsa (முர்த்தஜா) நதிக்கு வடக்கே பல்கேரியாவிலும் கிரீஸிலும் பல்லாயிரக் கணக்கான இராணுவ வீரர்களை வெறி பிடித்தவர்களே போல் கொண்டுவந்து நிறுத்தினார். இதை யுணர்ந்த இஸ்மத்



அரசாங்கம் (துருக்கி) தான் எதற்கும் தயாரென்பதை நாவினால் அறையாமல் அதே மாரிட்ஜா நதிக்குத் தெற்கே தனது எல்லையில் அட்ரியாநோபிள் முதல் மத்தியதரைக் கடலில் சங்கமமாகும் மாரிட்ஜா நதி முகத்துவாரம் வரை, தமது வீரபராக்கிரம உருவத்தைத் தோற்றமாய்க் கொண்ட இராணுவ சிப்பாஹிகளைக்கொண்டு போய் அணிவகுத்து நிற்கும்படிச் செய்தது. பின்னர் நடந்த மின்சார விஷயம் யாதோ யாமறியோம். ஆனால் ஹிட்லர் தனது படைகளை அப்படியே சந்தடியின்றி வாபஸ் பெற்றுக்கொண்டு ரஷ்யாமீது படை யெடுக்கச் சென்றுவிட்டார். துருக்கியும் தான் நிறுத்திவைத்த படைகளையும் வாபஸ் பெற்றுக்கொண்டு விட்டது. இதைக் கண்ட அல்லது உணர்ந்த எவரும் ஆச்சரியப்படாமலிருப்பதற்கில்லை. இதைக்கொண்டு துருக்கியானது ஹிட்லருக்குச் சாதக மாகவும், பிரிட்டனுக்கு விரோதமாகவும் இருக்கிறதென எவரும் தீர்மானித்து விட வேண்டாம். இப்படியே, ஹிட்லரைக் கண்டு ஒரு சில அரசாங்கங்கள் நடுக்கமுற்றதே போல் துருக்கியும் நடுநடுங்கிப் பயந்து நிற்கிறதென்றும் எண்ண வேண்டாம். இஃதொரு பக்கல் கிடக்க, மற்றொரு புறத்தையும் கவனிப்பீர்களாக:

சஃதாபாத் (ஈரான்) உடன் படிக்கை மூலம் முஸ்லிம் அரசாங்கங்களான துருக்கி, இராக், ஈரான், அப்கானிஸ்தான் ஆகிய நான்கும் எவ் விஷயத்திலும் ஏக ஒற்றுமையாய் இருப்பதாக முடிவு செய்து கொண்டது உலகத்தார்களுக்கெல்லாம் தெரியும். இங்ஙனமிருந்தும் ஒரு சில காரணங்களை முன்னிட்டு பிரிட்டன் இராக் மீது படையெடுத்துச் சென்றதும், பின்னர் ஈரான் மீது நடவடிக்கை எடுத்துக்கொண்டதும் வெளிப்படையான விஷயம். ஆனால் தன் நேச உடன்படிக்கை நாடுகளில் பிரிட்டன் தலையிட்டவுடனே துருக்கி தலையிடவில்லை; தலையிட விரும்பவுமில்லை யென்பது அதன் மௌனத்தால் தெளிவாயிற்று. துருக்கி இப்படி இருந்து விட்டதால், அது பிரிட்டனுக்குச் சாதகமாகவும், பிரிட்டனுடைய எதிரிக்கு விரோதமாகவும் அமைந்திருக்கிறதென எவரும் கருத வேண்டாம். இதே முறையில் பிரிட்டிஷ் படையினர் பிரான்ஸின் சுயேச்சை கவர்மெண்ட்டான டிகால் கட்சிக்கு ஆதரவு அளிக்கு முகத்தான், ஸிரியா (ஷாம்) சென்று யுத்தம் நடத்தி அதைக் கைப்பற்றிக் கொண்டு விட்டது. ஸிரியாவின் வடக்கு எல்லைப் புறத்தில்தான் துருக்கியின் எல்லை சந்திக்கின்றது. யுத்தம் செய்து கொண்டே சென்ற பிரிட்டிஷ், டிகால் படைகள் துருக்கியின் எல்லைப்புற நகரங்களான அலெக்ஸாண்ட்ரிடா (இஸ்கந்தரிய்யா), அன்ட்யாக் (அன்தாக்கியா) வந்ததும் அப்பால் ஓரடியும் எடுத்து வைக்காமல் அப்படியே நின்றுவிட்டன. காரணமென்ன? ஏன் துருக்கியின்மீது அப்படியே நேரே படையெடுத்துச் செல்லக் கூடாது என்ற சந்தேகம் உண்டாகலாம். துருக்கியும் பிரிட்டனும் ஒரே மனப்பான்மைகொண்டவையாயிருப்பது தான் இதற்குக் காரணம் என்று எவரும் கூறவும் முடியாது. பின்னர் இதன் இரகசியந் தானென்ன? தற்காலத் துருக்கித் தலைவரான இஸ்மத் இனோனுவின்

எண்ணத்தில் புகுந்து கொண்டிருப்பதுதானென்ன? என்பது எவருக்கும் விளங்காமலேயிருக்கிறது. இந்த இரகசியத்தை எப்படியேனும் உணர்ந்து கொள்ளவேண்டுமென இங்கிலாந்தின் பார்லிமெண்டில் பல அங்கத்தினர்களும் பகிரதப் பிரயத்தனப்பட்டனர். சர்ச்சில், தனக்கும் அவ் விஷயம் தெரியவராதென்றே கூறிவிட்டார். இதே முறையில் ஜெர்மன் பார்லிமெண்ட்டான ரீச் ஸ்டாக்கில் அமர்ந்திருக்கும் பல மெம்பர்கள், துருக்கியின் இந்த இரகசியத்தையும் அவர்களின் மனப்பான்மையையும் அறிந்துகொள்ள வேண்டுமெனப் பெரிதும் முயற்சித்தனர். ஆனால் ஹிட்லர் இது சம்பந்தமாய் எதையும் பகிரங்கமாய்க் கூறமுடியவில்லை. என்றாலும் ஜெர்மானியும், பிரிட்டனும் எத்தனையோ வகையில் இவ் விஷயத்தை யுணர்ந்து கொள்ள வேண்டுமெனப் பிரயத்தனப்பட்டே வருகின்றன. ஆனால், எண்ணம் பலிக்கவில்லையென்று மட்டும் நன்கு தெரிகிறது. யுத்தமேகமடர்ந்த இவ்வுலகத்தில் துருக்கியானது எந்தப் பக்கம் சாய்ந்து விடுமோவென இரு சாராரும் அச்சமுடையவர்களாகவே இருந்து வருகின்றார்களென கூறுவது மிகையாகாது. உலக யுத்தத்தின் வெற்றியே துருக்கியின் தராசு முனையில் வைக்கப்பட்டிருக்கிறதென அனேக பல அரசியல் நிபுணர்கள் எண்ணிக் கொண்டும் எழுதிக்கொண்டும் கூறிக்கொண்டுமிருக்கின்றனர். இதுகாறும் கூறியது துருக்கி கவர்மெண்டாரின் தற்சமய நிலைமையின் சுருக்கமாகும்.

பின்னர், இந்தியாவில் வதியும் முஸ்லிம்களுக்கெல்லாம் ஏகப்பிரதிநிதிஸ்தானமாய் அமைந்திருக்கும் முஸ்லிம் லீக், சுமார் 5ஆண்டுகளுக்கு முன்னிருந்தது போலில்லாமல் தற்சமயம் அபாரமான சக்தியுள்ளதாய் நிற்கின்றது. இது சம்பந்தமாய் அதிகம் நாம் இங்கு விவரிக்கப் போவதில்லை. சுருங்கக் கூறுமிடத்து அரை நூற்றாண்டுகளுக்கு மேல் வேலை செய்து கொண்டுவந்த காங்கிரஸ் மகாசபையின் காரியங்களை யெல்லாம் இக்குறுகிய 5 ஆண்டுகளுக்குள், மௌனமாயிருந்து கொண்டிருந்த முஸ்லிம் லீக் தகர்த்தெறிந்து விட்டதென்பதும், அதன் தலைவர்கள் போடும் ஒருதலைப் பட்சமானத் திட்டங்களெல்லாம் நடைபெற முடியாதவாறு செய்து விட்டதென்பதும், முஸ்லிம் லீக் ஏற்றுக்கொள்ளாத அரசியல் சம்பந்தமான எந்தத்திட்டத்தையும் இந்தியாவுக்குள் அமல் நடத்த முடியாதவாறும், எவரும் எத்தகைய அதிகாரத்தைக் கொண்டும் முஸ்லிம் லீகின் அபிப்பிராயத்தை உல்லங்கனம் செய்து, தன் சுயேச்சாதிகாரத்தை ஸ்தாபிக்க முடியாமல் திகைக்கும்படிச் செய்துவிட்டதென்பதுமே போதுமானவையாயிருக்கின்றன. இதற்கு உதாரணமாய் திருவாளர்களான ராஜகோபாலாச்சாரியார், சத்தியமூர்த்தி ஐயர், **T. T.** கிருஷ்ணமாச்சாரியார், பாரிஸ்டர் ஆஸிப் அலீ போன்றவர்கள் மனக்கசப்புடனேயாயினும் உதட்டளவிலேயாயினும் அகில இந்திய முஸ்லிம் லீக் திட்டமாம் பாக்கிஸ்தானை கொள்கையளவிலேனும் ஏற்றுக் கொள்ளவேண்டுமென கூறமுன் வந்துள்ளனர். இந்தியாவுக்கொரு விமோசன வழியைக் காட்டவேண்டுமென 24-3-42-ல் இந்தியாவுக்கு விஜயஞ் செய்த பிரிட்டிஷ் யுத்தமந்திரிச் சபையின் பிரதிநிதியான ஸர் ஸ்டாப்போர்டு கிரிப்ஸ் என்பவரும், முஸ்லிம் லீகை அதன் கொள்கையை மறுக்க முடியாமல் ஏற்றுக் கொண்டாரென்று பல அரசியல் வாதிகள் இதுசமயம் பகிரங்கமாய்க் கூறியே வருகின்றனர். எனவே, இந்தியா விமோசனம் பெற வேண்டுமாயின், முஸ்லிம் லீகை அண்டியே ஆகவேண்டும் என்ற உணர்ச்சி அகில இந்தியத் தலைவர்களுக்கெல்லாம் இதுசமயம் உதயமாய்விட்டதெனலாம். ஆகவே இந்தியாவின் அரசியல் சொக்கட்டான் விளையாட்டுத் தராசு முனை, முஸ்லிம் லீக் கைவசமே இச்சமயம் இருக்கிறதென்றே யாம் கூறுகிறோம். இதைக் கண்டு ஒரு சில எதிரிகள் எள்ளி நகையாடலாம்? ஆனால் அவர்கள் பின்னால் வருந்தவே நேரிடுமென்பதை ஞாபகத்தில் வைக்க வேண்டும். இதற்கு நம் தென்னாட்டு முஸ்லிம்கள் செய்யவேண்டியதொன்றுண்டு. அஃதென்னவெனில், ஒவ்வொரு நாடு நகரங்களிலும் குக்கிராமங்களிலும் கூட வசிக்கும் முஸ்லிம்கள், முஸ்லிம் லீகில் அங்கத்தினர்களாய்ச் சேர வேண்டும். அங்கங்கே இல்லாத விடங்களிலெல்லாம் லீக் ஸ்தாபனங்களை உடனே நிறுவவேண்டும். சிறந்த பிரசார பலமுள்ள இஸ்லாமியப் பத்திரிகைகளைத் தம்முயிர் போல் ஆதரிக்கவேண்டும். அப்போதைக்கப்போது முஸ்லிம் லீக் இடும் ஆணைகளை அவர்கள் அதி ஜாக்கிரதையாய் நிறைவேற்றிவரல் வேண்டும். முஸ்லிம்களாகிய நாம் அகில இந்திய முஸ்லிம் லீக் ஒன்றுதான் நம்முடைய ஏகப்பிரதிநிதிச் சபை யென்பதைப் பகிரங்கமாய்ப் பலமாய்த் தெளிவுபடுத்தி விட வேண்டும். பின்னர் என்ன நடக்கும் என்பதை ஆயுளுள்ளவர்கள் அறிந்துகொள்ளவே போகின்றனர். ஆதலால் யாம் மேலே எடுத்துக் காட்டிய தலையங்கப்படி அரசியலில் துருக்கியும் முஸ்லிம் லீகும் உலகில் எத்தகைய வன்மை வாய்ந்தனவாய் விளங்கா நிற்கின்றன வென்பதை யுணர்ந்து, அதற்குதவியான காரியங்களை ஒருமித்து விடா முயற்சியுடன் நம் முஸ்லிம் சோதரர்கள் செய்யவேண்டுமாய்த் தெரிவித்துக்கொள்வதுடன் இதனை முடிக்கின்றோம்.

# உண்மை உபதேசங்கள் அல்லது குத்பாத்

## GOOD SERMONS OR GUTHUBATH

BY MAULANA MAUTHOOTHI

### முஸ்லிமுக்கவசியம் ஞானம்—II

(முன் தொடர்)

சோதரீர்! தாங்கள் கூறிய விடையால், இஸ்லாம் என்பது ஞானத்துக்கும் அறிவுக்கும் அறிவுக்குப்பின் அதன்படி நடப்பதற்குமே பெயராயிருக்கிறது என்பது வெள்ளிடைமலை. ஒரு மனிதன் அறிவற்றவனாகவும் ஆய்ந்தோய்ந்து கவனிக்காதவனாகவும் இருந்துகொண்டே பிராம்மணனாய் இருக்கலாம். என்னெனின் அவன் பிராம்மணனாகவே ஜனனமாயிருக்கிறான்; பிராம்மணனாகவே யிருப்பான். இங்ஙனமே மற்றொருவன் அறிவும் ஆராய்ச்சியும் மார்க்க சம்பந்தமான ஞானமுமில்லாமலே ஜாட் வர்க்கத்தைச் சேர்ந்தவனாயிருக்கலாம். என்னெனில், அவன் ஜாட் வர்க்கத்தில் ஜனனமானான்; அவன் ஜாட் வர்க்கத்தைச் சேர்ந்தவனாகவே யிருப்பான். ஆனால், மார்க்க சம்பந்தமான ஞானமும் அதற்குப்பின் அதற்குரிய கிரியைகளும் இல்லாமலும் ஒருவன் முஸ்லிமாய் இருப்பது முடியாது. என்னெனின், முஸ்லிம் என்பது பிறப்பினால் கிடைக்கக்கூடிய தன்று. ஆனால், இஸ்லாத்தின் ஞானத்தைப் பற்றி அதன்படி நடப்பதனால் மட்டுமே ஒருவன் முஸ்லிமாகக் கூடும். அதாவது, ஒரு மனிதன் ஹஜ்ரத் முஹம்மத் (ஸல்) அவர்களுடைய போதனைகளென்னவென்பதைச் செவ்வனே உணர்ந்து கொள்ளாமல் மட்டும் அவ்வம்சங்களின் மீது எங்ஙனம் சரியான மனோ நன்னம்பிக்கை கொண்டுவருதல் சாலும். பின்னர் அவன் அவர்களுடைய சத்திய போதனைகளின்படி தன் காரியங்களை எங்ஙனம் செய்தல் சாலும்? மேலும் இத்தகைய விஷயங்களைச் சரியாக உணர்ந்தும் அறிந்தும் கொள்ளாத ஒருவன் சரியான நம்பிக்கைக்குரிய முஸ்லிமாய்ச் சமைதல் எங்ஙனம் சாலும்? இது முடியவே முடியாது. இதனால் நாம் தெரிந்துகொள்வதாவது: அறியாமையுடன் முஸ்லிமாய்ச் சமைவது அல்லது முஸ்லிமாகவே யிருப்பது முடியாத காரியமாகும் என்பதேயாம்.

ஒரு மனிதன் முஸ்லிமுடைய கிருஹத்தில் ஜனனமாயிருக்கலாம். அவனுடைய பெயரும் முஸ்லிம்களுக்கொப்பவே காணப்படலாம். மேலும் அவன் முஸ்லிம்களைப்போலவே ஆடைகள் அணிந்துமிருக்கலாம். இம்மனிதன் தன்னைத்தானே முஸ்லிமென்றும் சொல்லிக்கொள்ளலாம். ஆனால் உண்மையில் இவன் முஸ்லிமா யில்லை. சத்தியமாகவே ஒருவன் முஸ்லிமாக யிருக்கவேண்டுமாயின், இஸ்லாம் என்பதென்ன வென்பதை முதன்முதலாய் அறிந்து கொண்டிருத்தல் வேண்டும். பின்னர் அதன்படி காரியங்களையும் அவன் செய்துகொண்டுவரவேண்டும். இதுதான் முஸ்லிம் என்பவனுக்குரிய இலட்சணங்களாம். அல்லாஹ்வின் மீது நன்னம்பிக்கையுள்ள ஒரு முஸ்லிமுக்கும், நம்பிக்கையற்றவனான காபிர் என்பவனுக்குமிடையே வித்தியாசம் பெயர்களிலில்லை. ஒரு



வன் ராம்பிரசாத் என்னும் பெயருக்காக காபிராகவும் அப்துல்லா என்னும் பெயருக்காக முஸ்லிமாகவுமில்லை. இங்ஙனமே ஒருவன் கீழே வேஷ்டியைக் கட்டுவதால் காபிராயிருக்கிறான்; மற்றொருவன் கால் சட்டையும் கைலியும் உடுத்துவதால் முஸ்லிமாயிருக்கிறானென்பதுவுமில்லை. ஆனால் இவ்விருவருக்குமிடையே உண்மையில் காணப்படும் வித்தியாசமானது, இஸ்லாம் சம்பந்தமான ஞானமும் அதற்குரிய ஒழுக்கங்களுமேயாம். அதாவது, காபிரான ஒருவன், ஆண்டவனுக்கும் அடியானுக்குமிடையே எத்தகைய சம்பந்தமிருக்கிறதென்பதையும், தன் சிருட்டிகர்த்தாவின் நோக்கத்துக்கொப்ப உலகத்தில் வாழ்ந்து வருவதற்கு நேரான மார்க்கம் யாதென்பதையும் செவ்வனே சரியாய் உணர்ந்து கொள்ளாதவனாயிருக்கிறான். இங்ஙனமே ஒருவன் முஸ்லிமுடைய பிள்ளையாய்ப் பிறந்திருந்தும் அறியாமை நிரம்பியவனாகவும் இஸ்லாம் மார்க்க சட்டங்களின்படி ஒழுகி நடக்காதவனாகவுமிருப்பானாயின், தாங்களெல்லீரும் இம் முஸ்லிமுக்கும் மீக்கூறிய காபிருக்குமிடையே யாது பாகுபாட்டைச் செய்ய முடியும்? பின்னர்க் கூறியவன் முஸ்லிமாகவும், முன்னே சொல்லப்பட்டவன் காபிராகவும் சமைகிறானென்பதற்கு ஏதேனும் அர்த்தமுண்டா என்பதைக் கவனித்துப்பார்ப்பீர்களாக.

நண்பர்காள்! பின்னே காணப்படும் விஷயங்களை நன்கு கவனித்து ஆலோசனை செய்து பார்ப்பீர்களாக: தாங்கள் அல்லாஹ்வுக்கு அவனுடைய அருட் கொடைகளுக்காக நன்றி செலுத்துகின்றீர்கள். அவன் அபாரமான பெரிய அருட்கொடையான இஸ்லாத்தை தங்களுக்குக் கொடுத்தருளினான் என்றும் கூறுகின்றீர்கள். அல்லாஹ்வின் அவ்வருள் கிடைப்பதும் கிடைக்காமற் போவதும், நீங்கள் அதை உணர்ந்து சரியாய் அறிந்து அதன்படி நடப்பதையே பொறுத்திருக்கின்றது. இவ்வருள் எத்தகையதென்பதை ஒருவன் சரியாய் உணர்ந்து கொள்ளவில்லை யாயின், மனிதனுக்கு அது கிடைக்காமலே (நவூது பில்லா) போய்விடவும் கூடும். ஏதோ ஒருவன் அவ்வருட்கொடையை ஒரு சிறிது அடைந்திருப்பானாயினும், அறிவும் இஸ்லாத்தின் சரியான ஞானமும் இல்லாமலிருப்பின் 'ஒவ்வொரு சமயமும் அஃது அவனை விட்டுப் பறந்து போய்விடவும் கூடும் எனும் அச்சம் இருந்துகொண்டே யிருக்கிறது. ஒருவன் தன் அறியாமையால் 'யான் முஸ்லிமாகவே யிருக்கிறே'னென்று எண்ணிக்கொண்டிருக்கலாம். ஆனால் உண்மையில் அவன் முஸ்லிமாகவே யில்லாமலும் இருத்தல் கூடும். இஸ்லாத்துக்கும் குப்ருக்குமிடையே வித்தியாசமென்ன வென்பதையும், இஸ்லாத்துக்கும் ஷிர்க்கு (இணை வைத்தலு)க்குமிடையே வித்தியாசம் யாது என்பதையும் உணர்ந்து கொள்ளாத ஒருவன், கண் தெரியாத ஒருவன் அந்தகார சமயத்தில் தடியை ஊன்றிக்கொண்டு நேரான வழியில் நடக்க யத்தனிப்பானாயின் அவன் அறியாமலேயே கோரிய வழியில் போய்ச் சேர்ந்திருக்கவும் கூடும் என்பதேபோல், இஸ்லாத்துக்கும் அஃதல்லாததுக்கும் வித்தியாசமென்ன வென்பதை உணராதவன் எப்பாதையில் நடந்து செல்லு

கிறேமென்பதைத் தீர்மானிப்பது முடியாது. இது மட்டுமா! நேரான வழியில் சென்றுகொண்டிருக்கிறே மென்று குருடன் எண்ணிக்கொண் டிருக்கலாம்; ஆனல், உண்மையில் அவன் வழி தடுமாறியவனுகவே இருக்கவும் கூடும். இவனுக்கு மற்றோர் உதாரணத்தையும் கூற லாம்:

கண் தெரியாத ஒருவன் தன்னுடைய அத்தியந்த நண்பனைச் சந்திக்கும் நோக்கத்துடன் அந்தகாரத்துள் நடந்துகொண்டிருக்கும் போது, இவனுக்கு விரோதியாயிருக்கக்கூடிய ஒருவனை இவன் அடையவும் கூடும். அவ்விரோதி, பார்வையற்ற இவனை இவனுடைய நோக்கத்துக்கு விரோதமாய்க் கைப்பிடித் தழைத்து மோசமான வழியிலும் இடத்திலும் இவனைக் கொண்டுபோய் விட்டு விடுதலும் சாலுமன்றே.

ஆகவே இத்தகைய சங்கடங்களெல்லாம், மார்க்க சம்பந்தமான அறிவும் ஞானமும் இல்லாதவர்களுக்கே பெரும்பாலும் வந்து பிடிக்குமென்பதை ஞாபகத்திலிருத்திக்கொள்ளல் வேண்டும். என்னெனின் அறிவும் சரியான விளக்க ஞானமும் இல்லாதவன் மார்க்க சம்பந்தமான பிரகாசத்தைப் பெற்றவனுயில்லை. எனவே, நடந்து செல்லும் தன்னுடைய பாதையை —அதற்குரிய அடையாளங்களைத் தனது வெளிச்சத்தைக் கொண்டே தெரிந்து கொள்ளாதவனு யிருக்கிறான். இவனிடம் இஸ்லாம் மார்க்க சம்பந்தமான அறிவு ஞான விளக்கப் பிரகாசம் இருக்குமாயின் இவனுக்கு வழி தானே தெரியும். வேறு யாரும் இவனை மடக்கி வேறு வழியில் அழைத்துக்கொண்டுபோய் விடுவதும் சாலாது. ஆகவே ஒரு முஸ்லிம், ஹஜ்ரத் முஹம்மத் (ஸல்) அவர்கள் மார்க்க சம்பந்தமான எத்தகைய சத்திய போதனைகளை விளக்கிச் சென்றிருக்கின்றார்கள்; இது சம்பந்தமாய்க் குர்ஆன் வேதம் யாது போதனை செய்து செய்துகொண்டிருக்கிறது என்பதை உணராதவன் எப்பொழுதுமே அபாரமான ஆபத்துக்குள் சிக்கத் தயாராகவே இருந்துகொண்டிருக்கிறான் எனக் கொள்ளல் வேண்டும். இவ்வறியாமையால் தானே வழிதவறிப் போய் விடவும் கூடும். அல்லது வேறு யாரேனும் இவனை நயவஞ்சகமாய்க் கொடிய வழியில் கொண்டுபோய் விடுதலும் கூடும். முஸ்லிமான இவன்பால் இஸ்லாத்தின் கலாஞான விளக்கப் பிரகாசம் இருக்குமாயின், இவன் நடந்து செல்லும் இஸ்லாம் சம்பந்தமான ஒவ்வொரு பாதையையும் இவனே பார்த்துக்கொள்வான். மேலும் இவன் நடந்து செல்லும்போது குப்ருக்கும் ஷிர்க்குக்கும், நேரான வழிக்கும் கோணலான மார்க்கத்துக்கும், நன்மைக்கும் தீமைக்கும் வித்தியாசம் யாதென்பதை உணர்ந்து அதனை விட்டுத் தப்பிக் கொள்ளுதலும் கூடும். இவன் செல்லும்போது எவரேனும் இவனைக் கெடுக்கத் துணிவாராயின் அதனையும் உணர்ந்துகொண்டு, 'இவன் மோசமானவன் இவனைப் பின்பற்றி நாம் நடத்தல் கூடா'தென்பதையும் அவன் தானே உணர்ந்து கொள்வான்.

சகோதரர்களே! இதுகாறும் சொல்லிக்கொண்டு வந்ததிலிருந்து நீங்களும் உங்களுடைய சந்ததியார்



களும் முஸ்லிம்களாகவே இருக்க வேண்டுமாயின், அதற் கஸ்திபாரம் யாதென்பதை உணர்ந்து கொண்டேயிருப்பீர்கள். இது சர்வ சாதாரணமான ஒரு காரியமென நினைத்து இலேசாக மதிக்க வேண்டாம். நீங்கள் உங்களுடைய வெள்ளாமைக்கு வேண்டிய காரியங்களில் கவனமற்றவர்களா யிருப்பதில்லை. உங்களுக்கு வேண்டிய விளைபொருள்களுக்குத் தண்ணீர்ப் பாய்ச்சும் விஷயத்திலும், அதில் உண்டாகும் வேளாண்மையைப் பாதுகாப்பதிலும் கவனமற்றவர்களாகவும் நீங்கள் இருப்பதில்லை. உங்களுக்குரிய நாற்கால் பிராணிகளுக்குத் தீனி போடும் விஷயத்திலும் நீங்கள் கவனக் குறைவாய் இருப்பதில்லை. வேறு ஏதேனும் நீவிர்செய்யக்கூடிய தொழிலிலும் அதற்குரிய காரியங்களிலும் நீங்கள் கவனக்குறைவாயிருப்பதில்லை. ஏன்? நீங்கள் மேற்கண்ட காரியங்களில் கவனக் குறைவாயிருப்பீர்களாயின் பட்டினியாய்க் கிடந்து மடிய நேரிடும்; உங்களுடைய ஆன்மாக்களெல்லாம் வீணே நாசமடைந்து போகும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள். விஷயம் இங்ஙனமிருக்க. நீங்கள் முஸ்லிம் ஆவதற்கும், முஸ்லிமாகவேயிருப்பதற்கும் மூல அஸ்திபாரமாய் விளங்கும் ஞான விளக்க அறிவை மட்டில் நீங்கள் ஏன் கவனக்குறைவாய் மதிக்கின்றீர்க ளென்பதை எனக்குச் சொல்ல முடியுமா? இத்தகைய கவனமின்மையால் மகா அருமையான ஈமான் என்னும் நன்னம்பிக்கை வீணாக நாசமடைந்து போய் விடுமென்ற அச்சம் உங்களுக்கில்லையா? ஈமான் எனும் அல்லாஹ்வின் உண்மையான நன்னம்பிக்கை

யானது ஆன்மாவைக்காட்டினும் அதிகமதிகம் மேம்பாடுடையதா இல்லையா? நீங்களெல்லாம் ஆன்மாவைக் காப்பாற்ற அதிக நேரத்தையும் கவனத்தையும் பிரயத்தனப் பிரயாசைகளையெல்லாம் செய்கின்றீர்கள். இதில் பத்திலொரு பங்கேனும் ஈமான் எனும் நன்னம்பிக்கையைப் பாதுகாக்கக் கூடிய முக்கிய அம்சத்துக்காக என் செலவு செய்யக் கூடாது?

இதனால், உங்களுள் ஒவ்வொருவரும் மௌலவிகளாய் ஆய்விட வேண்டும், பெரிய பெரிய கிரந்தங்களைப் படிக்கப் பத்துப் பன்னிரண்டு ஆண்டுகள் மட்டும் ஓதிக்கொண்டேயிருக்கவேண்டும் என்றெல்லாம் யான் கூறவில்லை. ஒருவன் முஸ்லிமாய்ச் சமைவதற்கு இத்துணை தூரம் படித்தே ஆகவெண்டுமென்பதவசியமில்லை. ஆனால் உங்களுள் ஒவ்வொருவரும் பிரதிதினமும் அரைமணி நேரமேனும் மார்க்க சம்பந்தமான கலா ஞானவிளக்க ஒளியைப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்றே கூறுகின்றேன். ஒவ்வொரு முஸ்லிமும், வாலிபராயிருக்கட்டும் வயோதிகராயிருக்கட்டும் சிறுவராயிருக்கட்டும் பெரியவராயிருக்கட்டும் குர்ஆன் எந்தக் கருத்து கொண்டு என்ன கல்விகளைக் கொண்டு உலகத்தில் தோன்றியுளது என்பதை மட்டிலேனும் குறைந்த பட்சம் அறிந்துகொள்ளப் பிரயத்தனப்படல் வேண்டும் இத்துடன் நபி (ஸல்) அவர்கள் எப்பொருளை அழிப்பதற்காகவும் பின்னர் எப்பொருளை அளிப்பதற்காகவும் இவ்வுலகத்துக்கு வந்தார்கள் என்பதையும் சரியாய் உணர்ந்து கொள்ளப்பிரயத்தனப்படல் வேண்டும். மேலும் இவ்வுலக வாழ்க்கை முறையை அல்லாஹ்வின் இஷ்டப்படி எங்ஙனம் நடத்திச் செல்லுதல் வேண்டுமென்பதையும் மறந்து விடுவது கூடாது. இதற்கு வேண்டிய அறிவையும் விளக்கத்தையும் பெற்றுக் கொள்ள அதிக நேரம் தேவையில்லை. இஃதுண்மையெனத் தாங்கள் நினைப்பீர்களாயின், பிரதிதினமும் அரைமணி நேரம் இதற்கென ஒதுக்கிவைத்தல் கஷ்டசாத்தியமான காரியமல்லவே. பின்னர் உங்களிஷ்டம்.

---



# 'கோயத்' சரிதை HISTORY OF ALKHOWAIT

'கோயத்' என்பது பாரசீகக் குடாவில் ஆங்கிலேயர்களுக்கு ஐக்கியப்பட்ட ஒரு சிறிய அரபி அரசாங்கமாகும். இஃது இராக்குக்கும் நஜ்துக்குமிடையே அமைந்திருக்கிறது. இதன் தலைநகர் கோயத் என்பதாகும். பாரசீகக் குடாவில் இச்சிறிய அரசாங்கம் நல்ல முறையில் முன்னேற்றமடைந்ததாய் விளங்கி நிற்கின்றது. இவண் அதிகம் நடக்கும் வியாபாரம் முத்துக்களுடையதுதான். கோயத் வாசிகள் தண்ணீரில் மூழ்குவதில் அதிக சாமர்த்தியம் படைத்தவர்களாவர். இவர்கள் சமுத்திரத்துக்குள்ளிருந்து முத்துச் சிப்பிகளை வெளியே கொண்டுவருகின்றனர். இச்சிறிய அரசாங்கத்தில் ஒரு லட்சத்து ஐம்பதினாயிரம் அரபிகள் வசிக்கின்றனர். இவர்களெல்லாம் இமாம் மாலிக் (அலை) அவர்களைப் பின்பற்றி நடப்பவர்களாயிருக்கின்றனர். இவர்களல்லாமல் ஐம்பதினாயிரம் ஜஞ்சிகள் (நீக்ரோக்கள்) வசிக்கின்றனர். இவர்களுமல்லாமல் இரண்டாயிரம் ஈரானியர்களும் இவண் காணப்படுகின்றனர். முத்துக்கள் எடுப்பதற்கு ஒருகாலமுண்டு. அச்சமயம் இந்தியர்களும், யூத வியாபாரிகளும் இங்கு ஏராளமாய் வந்து குவிகின்றனர். இதன் சுற்றுப்புறங்களிலுள்ள பாகங்களில் நாற்பதினாயிரம் மனிதர்கள் வசித்துவருகின்றனர். இங்கு அல்வப்ரா, அஸ்ஸபீஹா, அவ்ராமுர்ரூஸ் போன்றவை தலை சிறந்த நகரங்களாய் விளங்குகின்றன.

இங்கு பயிற்சியளிக்கப்பட்ட இராணுவ வீரர்கள் பெரும்பாலும் இல்லை. நகரத்தில் மட்டுமே பொலீஸ் சேவகர்கள் என்பவர்களைக் காணலாம். இவர்கள் உள்நாட்டைப் பாதுகாத்து வருகின்றனர். அவசியம் நேரும்போது இங்கு வசிக்கும் மக்களெல்லாருமே தேசத்தொண்டுக்கென தக்க முறையில் தயாராய் விடுகின்றனர். இது சமயம் இதற்கு ஷேக் அஹ்மதுல் ஜாபிர் சப்பாஹ் என்பவர் அரசராயிருக்கின்றார். அவரின் சரித்திரச் சுருக்கத்தையும் பின்னே கண்டு கொள்வீர்களாக:



### அஹ்மதுல்ஜாபிர் சரிதை

இவர் கி. பி. 1880-ல் கோயத் என்னும் தலை நகரிலுள்ள அரச மாளிகையில் ஜனனமானார். சிறுபிராயத்தில் தன் தந்தையின் மேற்பார்வையின்கீழ் அரபி கலா ஞானத்தையும் மார்க்க அரசியல் சம்பந்தமான இதர கலைகளையும் நன்கு

அடையப்பெற்றார். ஹிஜ்ரி 1339-ஆம் ஆண்டில் (அதாவது சுமார் 20-ஆண்டுகளுக்கு முன்) தனது பெரிய தந்தையின் குமாரர் ஷேக் சாலிம் என்பவர் மரணமடைந்த விஷயம் எட்டியதும், இவர் அரசாங்க சிம்மாசனத்தைக் கைப்பற்றிக்கொண்டார். ஆனால் இறந்துபட்டவரே அரச சிம்மாசனத்துக்குரியவரா யிருந்தார். அவர் மரணமடைந்து விடவே, வேறு எவரும் இப்பதவியைக் கைப்பற்றிக்கொள்ள இடங்கொடுக்காமல் அஹ்மதுல் ஜாபிர் என்னும் இவர் தானே அரசாங்கத்தைக் கைப்பற்றிக் கொண்டார். இவ்வரசாங்கத்திற்கு ஆதி பிதாவாய் விளங்கியவர் கி.பி. 1754-ல் இருந்த ஷேக் அப்துல்லா அஸ்ஸப்பாஹ் என்பவராவார். இவரே முதன் முதலாய்க் கோயத் தென்னும் நகரத்தைக் கைப்பற்றி அதற்கரசராய் அமர்ந்தார். அவருக்குப்பின் அவரது குமாரர்களான ஜாபிர், ஸப்பாஹ், அப்துல்லா, ஹம்த், முபாரக், ஜாபிர் II முதலியவர்கள் முறையே அரசர்களாய் விளங்கியிருக்கின்றனர். ஜாபிர் II-க்குப் பின்னே தற்சமய அரசரான அஹ்மதுல் ஜாபிர் என்பவர் அரசராயிருந்து வருகிறார். இவருடைய மூல பிதா 18-ஆம் நூற்றாண்டில் கோயத் என்னும் பகுதிக்கு வந்தபோது, இஃதொரு சர்வ சாதாரணமான குக்கிராமமாகவே யிருந்தது. பற்பலவிடங்களிலும் ஆங்காங்கே சிறிய குடில்களே காணப்பட்டுவந்தன. பனீகாலித் என்னும் கூட்டத்தார் அங்கு வசித்து வந்தனர். புதிதாய் வந்த ஷேக் அப்துல்லா அஸ்ஸப்பா என்பவரும் அங்கேயே தன்னுடைய வாச ஸ்தலத்தை நிர்மாணித்துக் கொண்டார். இவர் இங்கு வந்து சேர்ந்ததன்பின் இச்சிறிய பூபாகத்தின் நன்மைக்காகப் பெரிதும் பாடுபட்டார். இதன் காரணமாய் இவர் அங்கு வாசஞ்செய்துவந்த மக்களிடையே பெரிய கௌரவத்தையும் கீர்த்தியையும் மதிப்பையும் பெற்றவராய்ச் சமைந்தார். இறுதியாய் இவர் தானே அங்கு அரசராயிருக்க விரும்புவதாய்த் தெரியப்படுத்தவும், அம்மக்களெல்லாம் அப்படியே ஏற்றுக்கொண்டு இவரிடம் தங்களுடைய இராஜ விசுவாசப் பிரமாணங்களைச்செய்து கொடுத்தனர். அதுமுதற்கொண்டே கோயத் நாளுக்கு நாள் முன்னேற்றப் படித்துறையில் முன்னேறத் தோன்றிற்று.

### ஆங்கிலேயர் எப்படி வந்தனர்

ஆதியில் கோயத் தேசப்பகுதி இராக்கைப்போலவும், நஜ்த் அரசாங்கத்தைப் போலவும், துருக்கி உதுமானிய கவர்மெண்ட்டுக்குட்பட்டதாகவே யிருந்தது. எனினும், கோயத் வாசிகள் உள்நாட்டு வியவகாரங்களில் சுயேட்சையுடன் நடந்து கொள்ளும் அதிகாரம்பெற்றவர்களாகவே யிருந்தனர். கி. பி. 1913-ல் ஒரு பெரிய அசம்பாவிதத்தின் காரணமாய்க் கோயத் பகுதியானது ஆங்கிலேயர்களுக்கு ஐக்கியமாயிற்று. அதன் விவரம் வருமாறு:

ஷேக் முபாரக் என்பவரும், அவருடைய குமாரரும் ஸப்பாஹ் என்னும் குடும்பத்தைச் சேர்ந்தவர்களாயிருந்தனர். இவர்களிருவரும் அச்சமயம் கோயத்தின் அரசராயிருந்த அப்துல்லா என்பவரையும் அவருடைய சோதரர் ஜர்ராஹ் என்பவரையும் கொன்றுவிட்டு, அரச பதவியைத் தாங்கள் கைப்பற்றிக்கொள்ள வேண்டுமென எண்ணினர். இதற்கொப்ப ஷேக் முபூரக் என்பவரும், அவருடைய குமாரரும் தாங்கள் எண்ணியபடி காரியத்திலும் வெற்றிக்கொண்டனர்; அரச சிம்மாசனத்தையும் அவர்கள் கைப்பற்றிக்கொண்டனர். தேசமக்கள் இவ்வக்கிரம விஷயத்தை உணர்ந்ததும் முபாரக் என்பவருக்கு விரோதமாய்ப்புரட்சி செய்யத் தலைப்பட்டனர். ஆனால், கொல்லப்பட்ட அப்துல்லா என்னும் அரசரின் குமாரர் அச்சத்தின் காரணமாய்ப் பஸ்ராவை நோக்கி ஓடிவிட்டார். இவர் ஓடியதற்குக் காரணம் உதுமானிய அரசாங்கத்துக்கு இவ்வக்கிரம விஷயத்தை அறிவிப்பதுடன் அச்சமயம் சிம்மாசனத்தைக் கைப்பற்றிக் கொண்டிருக்கும் தனது சிற்றப்பனைப் பழிக்குப்பழி வாங்கவேண்டும் என்பதுமாகும். இவர் உதுமானிய கவர்மெண்ட்டுடன் வேண்டிக்கொண்டத னிமித்தம் துருக்கி அரசாங்கத்தார் ஒரு பெரிய படையைத் திரட்டி இவருடைய உதவிக்காக கோயத்துக்கு யுத்தக் கப்பல்களை அனுப்பி வைத்தனர். அன்றியும், புதிய அரசரான ஷேக் முபாரக் என்பவர் கோயத்தின் சிம்மாசனத்தை விட்டுவிடவேண்டும் அல்லது இஸ்தம்பூல் (கான்ஸ்டான்டிநோபிள்) வந்து விட வேண்டும், அல்லது வேறு ஏதேனுமோர் தேசத்துக்குச் சென்றுவிட வேண்டும்; சென்றதன்பின் உதுமானிய அரசாங்கத்தினின்றும் சட்டப்பிரகாரம் உபகாரச்சம்பளமும் பெற்றுக்கொள்ளலாம் என்று அரசாங்க ஆக்ஞையும் பிறப்பிக்கப்பட்டது. ஆனால் புதிய அரசராய் விளங்கிய ஷேக் முபாரக் என்பவர் இதற்கிசையாமல், தனக்கு உதவி செய்யுமாறு பூஷஹர் என்னும் நகரத்திலிருந்த ஆங்கில ஸ்தானிகரிடம் வேண்டுதல் செய்து கொண்டார். மேலும் இவர் தன்னுடைய கடிதத்தில், 'எனக்கு உதவிசெய்யுங்கள், நான் உங்களுக்கு ஐக்கியப்பட்டவனாகவே யிருப்பேன்' என்றும் வரைந்திருந்தார்.

இவ்வளவு போதுமல்லவா? உடனே பிரிட்டிஷ் ஸ்தானிகரானவர் ஒரு பெரிய யுத்தக் கப்பலை ஷேக் முபாரக் என்பவர் உதவிக்காக கோயத்திற்கு அனுப்பிவைத்தார். இப்பெரிய யுத்தக் கப்பலானது, முன்னால் வந்துகொண்டிருந்த துருக்கியரின் யுத்தக்கப்பல் கோயத்துள் நுழையா வண்ணம் தடுத்துவிட்டது. இதன் காரணமாய்க் கோயத் என்னும் பகுதி ஒரு உடன்படிக்கையின் மூலம் சுல்தான் முபாரக் என்பவரின் காரணத்தால் ஆங்கிலேயருக்கு ஐக்கியப்பட்டதாய் அமைந்துவிட்டது. இங்ஙனமே தான் பாரசீகக் குடாவிலுள்ள உஜத், அல்ரமவுத் போன்ற முஸ்லிம் அரசாங்கங்களெல்லாம் ஆங்கிலேயருக்கு ஐக்கியப்பட்டதாய் அமைந்துவிட்டன. கோயத் உடன்படிக்கையில், 'கோயத் அரசாங்கம் பிரிட்டிஷ் அரசாங்கத்தைத் தவிர வேறு ஏந்த அந்நிய அரசாங்கத்தையும் இதில் தலையிட விடுவதில்லை; எந்த அரசாங்கத்திடமும் எத்தகைய உடன்படிக்கையும் செய்து கொள்வதில்லை; பிரிட்டிஷ் அரசாங்கம் சமுத்திரவாயிலாய் கோயத் அரசாங்கத்துக்குப் பாதுகாவலாய் அமைந்திருக்கும்' என்றும் வரையப்பட்டது.

கி. பி. 1913௵ ஜூன்௴ 29௳-யில் லண்டனில் துருக்கி ஸ்தானிக

ராயிருந்தவர் பிரிட்டிஷ் கவர்மெண்டாருடன் ஓர் உடன்படிக்கை செய்து கொண்டார். அதில் உதுமானிய அரசாங்கம் கோயத் தேசத்தைக் கைவிட்டு விட்டதாகவும் அத்துடன் பாரசீகக் குடாக் கடலின் ஓரத்திலமைந்திருக்கும் சிறிய முஸ்லிம் அரசாங்கங்களின் அதிகாரங்களையும் பிரிட்டிஷ் கவர்மெண்ட்டுக்காகத் தான் கைவிட்டு விட்டதாகவும் வரையப்பட்டது.

### அரசாங்க முறை

கோயத்தில் அரசாங்க முறை இஸ்லாத்தின் சட்ட திட்டங்களின் படியே நடைபெறுகிறது. இங்கு அரசராயிருப்பவர் சர்வ கட்டளைகளையும் தானே பிறப்பிக்கின்றார். இன்னும் நாட்டில் நடக்கும் சகல காரியங்களையும் கூடிய மட்டும் தாமே கவனிக்கின்றார். இத்தேசத்து வருமானம் பெரும்பாகம் கடற்கரையைச் சேர்ந்ததாகவேயிருக்கிறது. இவண் ஒரு சட்டசபையும் உண்டு. இதன் தலைவர் அரசர்தான். இச்சபைக்கு கோயத்தைச்சேர்ந்த பெரிய தனக்காரர்களும் தலைவர்களும் அங்கத்தினர்களாய் விளங்குகின்றனர். அவர்கள் அரசருடைய அபிப்பிராயத்தை முதலில் அறிந்ததன்பின்னரே தாங்கள் எதையும் முடிவுகட்டுகின்றனர். இங்கு இளவரசு நியமனம் இல்லை. அரசராயிருப்பவர் இறந்து விட்டால் அக்குடும்பத்தில் பெரியவராயிருப்பவரே அரச சிம்மாசனத்துக் குரியவராய்ச் செய்யப்படுகின்றார்.

### பிரிட்டிஷ் ஸ்தானிகர்

இங்கு பிரிட்டிஷ் கவர்மெண்ட்டாரின் ஸ்தானிகருண்டு. இவர் தேசத்தின் உள் வியவகாரங்களில் எத்தகைய முறையிலும் தலையிடுவதில்லை. ஆனால் தனிப்பட்ட முறையில் அரசருடன் தனித்து எவ்விஷயத்தைப்பற்றியும் பேசிக்கொண்டிருப்பது வழக்கம். என்றாலும் தான் நேரே தேசத்தின் எக்காரியங்களிலும் தலையிடுவது வழக்கத்திலில்லாமலிருந்துவருகிறது.

---

கமலா :—ஏ குசும் ராணி ! எங்கள் வீட்டுக் கிளிப்பிள்ளையானது எப்பொழுதுமே பேசிக்கொண்டிருக்கிறதைப் பார்த்தாயா ?

குசும் ராணி :—இதில் ஆச்சரியப்படுவதற்கு என்ன இருக்கிறது. யார் வீட்டில் அந்தக்கிளி இருக்கிறதோ அம்மா திரிதானே அது இருக்கும்!

---

நாஜூமா பீ பீ :—ஏ சோதரி நாசிரா ! உன் பிரிய குமாரி பெரிய புத்தி சாலியாயிருக்கிறாள்.

நாசிரா :—எப்படி ? அவளால் என்ன நன்மையைக் கண்டு நீ அவளை அப்படிப் போற்றுகிறாய் ?

நாஜூமா :—நான் நேற்று அவளுடன் வார்த்தையாடிக்கொண்டிருக்கும் போது அவள், 'நான் உன்னைக் காட்டிலும் அதிக அழகாயிருக்கிறேன்' என்று கூறினாள்.

நாசிரா :—இதைப்பற்றி நான் என்ன சொல்லக் கிடக்கிறது. அவளுக்குப் புத்தியே யில்லை. இப்படித்தான் அவள் உளறிக்கொண்டேயிருப்பாள்.

# 'நூருல் இஸ்லாம்' வாரப் பதிப்பு

## "NOOR-UL-ISLAM"—WEEKLY !

சகோதரர்களே ! மேற்கண்ட நோக்கத்துக்காக சென்ற இதழில் நாம் அபிப்பிராயம் வெளியிட்டிருந்ததேபோல் புதுச்சேரி, கோட்டக்குப்பம், சிதம்பரம், லால்பேட்டை, நெல்லிக்குப்பம், பரங்கிப்பேட்டை, ஆகிய சில ஊர்களுக்குச் சென்றிருந்தோம். ஆங்காங்குமுள்ள நம் நண்பர்கள் 'நூ. இ. த்தை ஆவலுடன் ஆதரிப்பதாகவே வாக்குறுதியளிக்கின்றனர். அதிக தன சௌகரியமுள்ள நண்பர்கள் மிதமாகவே தென்படுகின்றனர்; இப்பிரச்னையை—வாரப் பதிப்பாக்கும் விஷயத்தை—அதிகமாக ஆதரித்தால் ஒருகால் தங்களையே நாம் எங்குப் பிடித்துக்கொண்டு விடுவோமோவென்றும் அச்சமுறுகின்றார்களென்பதையும் ஒருவாறு கண்ணுற்றேன். அதி உற்சாக உணர்ச்சி ததும்பிய பலர் ஒவ்வொரு ஊருக்கும் சென்று ஆங்காங்கே குறைந்தது 15 அல்லது 20 சந்தாக்களேனும் வாரப் பதிப்புக்கெனப் பதிவு செய்துகொண்டால் போதிய நன்மையாயிருக்குமென அபிப்பிராயங்கள் தெரிவித்தனர். குறைந்தது இருபது சந்தாக்களையுடைய 100 நகரங்களோ கிராமங்களோ இருந்தாலும் போதுமானதன்றோ என்றும் எடுத்துக் காட்டினர். எடுத்துக் காட்டுவதுடனில்லாமல் அவர்கள் தங்களூருக்கும் தங்களைச் சார்ந்த ஊர்களுக்கும் இதே முறையில் தாங்கள் உற்சாகத்தோடு வேலை செய்வதாகவும் ஏற்றுக் கொண்டு எமக்கு உற்சாக மூட்டியுள்ளனர். லால்பேட்டை (லால்கான்பேட்டை) முஸ்லிம்கள் நிறைந்த ஓர் ஊர். அங்குள்ள சிலரும் இதே நல்லபிப்பிராயத்தைத் தெரியப்படுத்தியதுடன் இதை ஆதரிக்கும் தோரணையில் தற்சமய மாதாந்த 'நூ. இ.' த்துக்குப் பல சந்தாக்களையும் சேர்த்துக் கொடுத்தனர். பரங்கிப்பேட்டையிலுள்ள சில உற்சாக உத்வேக வாலிப நண்பர்கள் சந்தா சேர்க்கும் விஷயத்தில் பங்கெடுத்துக் கொண்டது போற்றற்குரியதாகும். பாண்டிச்சேரியிலும், கோட்டக் குப்பத்திலும் எமது ஆப்த நண்பர்கள் இதற்கு நல்ல ஆதரவு நல்கினர். இதுகாறும் வெளிவராமலிருந்த நெல்லிக்குப்பம் இதுசமயம் எதிர்பாராவண்ணம் எமக்குச் சரியான ஆதரவளிக்க முன் வந்ததை நினைத்து சந்தோஷப்படாமலும் ஆண்டவனுக்கு நன்றி செலுத்தாமலிருக்க எம்மால் கூடவில்லை. ஆயினும், இதைக் கொண்டு மட்டும் வாரப்பதிப்பு என்பது பகற்கனவென்றே நான் நினைக்கின்றேன். எனவே, இதே நோக்கத்துக்காக இதே முறையில் நாம் மீண்டும் சுற்றுப்பிரயாணம் செய்ய உத்தேசித்துள்ளோம். ஆங்காங்குமுள்ள நண்பர்கள் எமக்கு இதே முறையில் உற்சாகத்தையும் உதவியையும் அளிப்பார்களாயின், தனவந்தர்களுக்குத் துன்பங்கொடாமல், அவர்கள் அஞ்சாத வகையில் சந்தாவின்தைரியத்தைக்கொண்டே தாராளமாய் 'நூ. இ.' த்தை வாரப் பதிப்பாகச் செய்து விடலாமென்ற நம்பிக்கை எமக்குண்டு. இதற்கு அல்லாஹ்வின் அருளும், அவனடி

# கலம்பகம் News & Notes.

### ஸ்டாலின் செய்தி.

மே தினத்தன்று மிஸ்டர் ஸ்டாலின் ரஷ்ய மக்களுக்கு விடுத்த சேதியில், ஹிட்லரின் கொடுமைகளையும், அவர் பிடித்த பிரான்ஸ், நார்வே, டென்மார்க், பெல்ஜியம், ஹாலந்து, செக்கோஸ்லவாகியா, போலந்து, யுகஸ்லேவியா, கிரீஸ் முதலிய நாட்டினரின் ரத்தத்தை அவர் உறிஞ்சும் விதங்களையும், நாஸிகளின் அட்டூழியங்களையும் விளக்கினர். ஹிட்லர், கோயபல்ஸ், ரிப்பன்ட்ராப், ஹிம்லர் முதலியோர் ஜெர்மன் முதலாளிகளின் கையாட்களென்றும், இப்பொழுது அவர்களின் சேனைபலம் குறைந்து வருகிறதென்றும், தம் (ரஷியா) பலம் பெருகி வருகிறதென்றும், பிரிட்டன் அமெரிக்க ஒத்துழைப்பால், ஜெர்மானியைத் தாம் எப்படியும் கண்டிப்பாய்த் தோற்கடிக்கப் போவதாயும் வீர முழக்கம் செய்துள்ளார்.

### கோயரிங் யார்?

மார்ஷல் கோயரிங் ஒரு பெரிய ஜெர்மன் முதலாளியாம். அவருக்கு டஜன் கணக்கான தொழிற்சாலைகளில் பங்குகளிருக்கின்றனவாம்.

---

(227-ஆம் பக்கத்தொடர்)

யார்களான எமது சர்வசாதாரண முஸ்லிம் சகோதரர்களின் ஆதரவும் பெரிதும் வேண்டற்பாலதாயிருக்கின்றது. அல்லாஹ் நம்மனோரின் நாட்டத்தை நிறைவேற்றி வைக்கத் துணைபுரிவானாக.

—ஹாபிஸ் பாகவி

### ரஷ்யா முழுதும்—படைஸ்தலம்.

ஸோவியத் மக்கள் ஏராளமாக பீரங்கிகள், விமானங்கள், உணவு முதலியவற்றை உற்பத்தி செய்து வருகின்றனராம். ஸோவியத் ரஷ்யா முழுதும் ஒரு பிரம்மாண்ட படை ஸ்தலமாக மாறியிருக்கின்றதாம்.

### எதற்கும் கொலை!

கால் நடைகளை ரகசியமாகக் கொன்றதற்காக ஜெர்மானியில் கசாப்புக் கடைக்காரனுக்குத் தூக்குத் தண்டனை விதித்தனராம்.

### ரெயில் இல்லை.

மே௴ முதல் தேதியிலிருந்து இந்தியா முழுதும் பிரயாணி ரயில் வண்டிகள், முன்பே குறைந்தது போதாதென்று மேலும் பல குறைக்கப்பட்டுள்ளன. மிலிட்டரி உபயோகத்துக்கும் பொருளாதாரத் தேவையைப் பூர்த்தி செய்யவும் ஏற்பட்டதாம் இவ்வேற்பாடுகள்.

### கோதுமை வராது.

மே௴ முதல் கோதுமைக் கட்டுப்பாடு அமலுக்கு வந்துவிட்டது. எந்த மாகாணத்தாரும் வேறு மாகாணத்துக்கு அனுமதியின்றி கோதுமையை ஏற்றுமதி இறக்குமதி செய்யக்கூடாது.

### ஹோட்டல் அதிர்ஷ்டம்.

சென்னையின் பல மஹல்லாக்களிலும் (டிவிஷன்களில்) ஹோட்டல்களை நடத்த முன் வருவோருக்கு பாத்திரங்கள், பணம் முதலியன கொடுத்து உதவ வேண்டுமென்று, மேயர் பாதுகாப்புக்கமிட்டி செய்த சிபாரிசை, ஸிவில் பாதுகாப்புக்



கமிஷனர் மிஸ்டர் மாரிஸ் ஒப்புக்கொண்டார். இது சம்பந்தமாக நபர்களை மேயரே சிபாரிஷ் செய்ய வேண்டுமாம். இதுவரை பெரியமெட், சூளை ஆகிய விடங்களில் உதவி செய்யப்பட்டிருக்கிறது.

### ஸி. ஆர். விலகினர்.

சென்னை மாஜி பிரதம மந்திரி திரு. ச. ராஜகோபாலாச்சாரியார் கொண்டுவந்த, முஸ்லிம் லீகின் பாகிஸ்தான் கொள்கையை ஏற்றுக்கொள்வதென்ற தீர்மானம், அலகாபாதில் நடந்த அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் தோற்கடிக்கப்பட்டது. ஆச்சாரியாருக்கு 15 ஓட்டுக்களே கிடைத்தன. அவர் தீர்மானத்தை எதிர்த்து 120 பேர்கள் ஓட்டளித்தனர். ஆச்சாரியார் கமிட்டியிலிருந்து விலகி விட்டார்.

### ராட்சஸர்கள் சந்திப்பு.

ஹிட்லரும் முஸோலினியும் லால்ஸ்பர்க் நகரில் 30-4-42ல் சந்தித்து அளவளாவிப் பேசினராம். இராணுவ அதிகாரிகள் பலரும் உடனிருந்தனராம். ஜப்பானிய தூதரும் கூட உடனிருந்திருப்பாரென்று கருதப்படுகிறது. ஆனால் அவர் பெயர் வெளிவரவில்லை. சந்திப்பின் நோக்கம், ரஷ்யாவை இத்தடவை ஓரே மூச்சில் தாக்க இத்தாலியத் துருப்புக்களை ரஷ்யப் போர் முனைக்கனுப்ப வேண்டுமென்று ஹிட்லர் முஸோலினியைக் கோரியிருப்பார் என்று சொல்லப்படுகிறது.

### நடக்காத பேச்சு.

ஜப்பானியர் இந்திய சமுத்திரத்தைக் கடந்து தென்னாப்பிரிக்காவைத் தாக்கலாம் என்று தென்னாப்பிரிகா பிரதம மந்திரியான ஜெனரல் ஸ்மட்ஸ் தெரிவிக்கிறார்.

### இந்தியாவிலே விமானம்.

இந்தியாவிலே விமானங்களைத் தயாரிக்க டாடா கம்பெனியார் புதிய தொழிற்சாலை ஒன்றை ஆரம்பித்திருக்கின்றனர். யுத்தம் ஆரம்பித்த பிறகு இந்த நாட்டில், இந்தியரால் ஏற்படுத்தப்பட்ட விமானத் தொழிற்சாலையில் இது இரண்டாவதாகும்.

### மாண்டலே வீழ்ந்தது.

பர்மாவின் பழைய தலை நகரான மாண்டலேயை ஜப்பானியர் 1-5-42-ல் ஆக்ரமித்துக் கொண்டது.

### கழுத்தில் தகடு.

சாதாரண ஜனங்களுக்கு அடையாள பில்லைத் தகடுகள் கொடுக்க இந்தியா கவர்மெண்ட்டார் முடிவு செய்துள்ளனர். அடையாள பில்லைத்தகடுகள் வைத்திருப்பதால் விமானத் தாக்குதலுக்கு உள்ளாகியவர்களைச் சார்ந்தவர்களுக்கு நஷ்ட ஈடும், பென்ஷனும் நிச்சயமாகக் கிடைக்குமாம். தகடு இல்லாவிடில், நஷ்ட ஈடு முதலியன கோர கஷ்டமாகுமாம். இதன் விலை ஓரணா தான். எல்லா மாகாணங்களிலும் போஸ்டாபீஸ், ரயில்வே, போலீஸ் ஸ்டேஷன், பெரியகடை முதலிய விடங்களில் இவை விற்க ஏற்பாடு செய்யப்படும்.

### பேராசைக்கு ஆபத்து.

யுத்த பயத்தால் பட்டணங்களிலிருந்து கிராமங்களுக்கு ஓடிவரும் ஜனங்களிடமிருந்து தாறுமாறாக அதிகக் குடிக்கூலி வாங்குவதைத் தடுக்கவும், அப்படி இதுவரை வாங்கியிருந்தாலும் அதைத் திரும்

பிக் கொடுக்க ஏற்பாடு செய்யவும் சென்னைச் சர்க்கார் கட்டுப்பாடு உத்தரவு பிறப்பித்துள்ளனர். இஃது தீவிரமாக அமலுக்கு வரும். ரெவின்யூ டிவிஷனல் ஆபீஸர்கள் இதுபற்றிய விபரங்களை உடனே விசாரித்து நியாயமான வாடகைகளை நிர்ணயஞ் செய்ய அதிகாரமளிக்கப்பட்டுள்ளனர்.

### விஷயமறியா வலையன்.

ஜாவாவிலிருந்து கடைசியாகக் கிளம்பிய விமானத்தில் 3 லட்சம் பவுன் வைரங்கள் ஒரு பையில் போடப்பட்டு ஆஸ்திரேலிய பாங்குக்கு அனுப்பப்பட்டது. அவ்விமானத்தை ஜப்பானியர் புரோம் நகருக்கு 60 மைல் வடக்கே சுட்டு வீழ்த்தினர். அவ்வைரப்பை அலைகளால் கரையோரமாக அடித்துத் தள்ளப்பட்டு கந்தலைக் கட்டியிருந்த ஒரு செம்படவன் கையில் அகப்பட்டதாம். அவன் அதைக் கங்காணியிடம் கொடுக்க, அஃது ஆஸ்திரேலிய பாங்குக்கு அனுப்பப்பட்டு விட்டனவாம்.

### சென்னையில் காங்கிரஸ் ஆட்சி!

சென்னை மாஜி பிரதம மந்திரி திரு. ராஜகோபாலச்சாரியார் பாகிஸ்தானை ஆதரிப்பதுபோல் கிளம்பியிருப்பது, அதை காங்கிரஸ், இந்து மகா சபை முதலிய பிரபல கட்சிகளும், மற்றும் பிரபல தலைவர்கள் எல்லோரும் பெருவாரியாக பெரிய எதிர்ப்பு நடத்துவார்களென்றும், அதன் காரணமாய் 'பாகிஸ்தான்' என்றாலே பயப்படும்படி நாட்டைக் குழப்பத்திலாக்கி விடலாமென்றும், பிறகு 'இத்தனை பேர் எதிர்க்கும் பாகிஸ்தானை நானும் கோரேன்' என்று பக்குவமாகச் சொல்லிக் காங்கிரஸில் சேர்ந்து விடுவர் என்றும், ஆகையால் காங்கிரஸின் உளவாளியாகவே இவர் இப்படிக் கிளம்பியிருப்பாரோ வென்றும் பலர் சந்தேகிக்கின்றனர். இன்னும் சிலர், 'ருசி கண்ட பூனை உரி கண்டு தாவுகிறது' என்றபடி முன் $2\frac{1}{2}$ வருடம் மந்திரிப் பதவி வகுத்துக் கண்ட ருசி, அப்பதவியை எப்படியாவது அடைவோம் என்று இவரை இக்கதிக்குள்ளாக்கி யிருக்கலா மென்றும் கூறுகின்றனர். மற்றுஞ் சிலர் இவர், மாஜி கவர்னர் லார்ட் எர்ஸ்கின் காலமுதல், வெள்ளைக்காரர்கள் ரோஜாச் செடிகள், குரோட்டன்ஸ்கள் என்று சொல்லிக்கொண்டும், நேற்று (2-5-42ல்) அ. இ. கா. கூட்டத்தில் கூட 'இந்தியாவின் தற்கால நிலைக்குப் பிரிட்டிஷார்தான் காரணம் எனச் சொல்லிக் கொள்வதில் பயனில்லை' என்று சொல்லிக்கொண்டும் வெள்ளையர்கள் பக்தராகவே யிருந்து வருகிறபடியாலும், உயிர் நாடிபோன்ற உயர்தர உத்தியோகங்களிளெல்லாம் 100க்கு 90 பேர் தம்மினத்தவர்களாகவே (பிராம்மணர்களாகவே) இருந்து வருகிறபடியாலும் சுலபமாக சுயநல ஆட்சி நடத்தி முன்போல் வெள்ளைக்காரர்களுக்கு நல்ல பிள்ளையாய் வேண்டிய வரிகள் போட்டுக் காலந்தள்ளுவோமென்று நினைக்கிறார்போலு மென்றும் கூறுகின்றனர். எனவே சென்னை மாகாண மக்கள் காங்கிரஸ்காரர்களின் மாஜி அரசாட்சியை மறந்துவிட வேண்டாமென்றே எச்சரிக்கின்றோம். பதவிப் பித்தேறிய சென்னை மாகாண பிராம்மணர்கள் 100 க்கு 100 பேரும், அவர்களது கையாட்களாகிய சில பல தமிழர்களும் அவரை ஆதரித்து வருவதும் ஆச்சரியமல்ல வென்பதையும் கவனத்திலிருத்த வேண்டும்.



### லீக்—காங்கிரஸ் சமரஸம்.

லீக்—காங்கிரஸ் சமரஸித்துக்காக லீக் 5 பேரையும், காங்கிரஸ் 5 பேரையும் தேர்ந்தெடுத்துச் சமரஸம் பேசத் தயாரா யிருப்பதாக அலகாபாதில் நடந்த அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் அதன் தலைவர் அபிப்பிராயம் தெரிவித்துள்ளார்.

### ஏமாற்றுப் பிரசாரம்.

கும்பகோணம் பார்லிமெண்ட்டின் ஆதரவில் பிரம்ம வித்யா லாட்ஜில் நடந்த ஒரு பொதுக் கூட்டத்தில் திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் பேசியபோது, கிரிப்ஸ் திட்டம் முறிந்ததற்கு ஜனாப் ஜின்னாவே தான் காரணமென்றும், ஜின்னாவுக்கே பாகிஸ்தான் என்பது புரியாத விஷயமென்றும் கூறிவிட்டுப் பிறகு தன் தலைவர் திரு. ஆச்சாரியார் பாகிஸ்தானை ஆதரிப்பதை மெச்சிப் பேசினார். ஜனாப் ஜின்னாவுக்குப் புரியாத பாகிஸ்தான் திட்டம் திரு. ஆச்சாரியாருக்குப்புரிந்து அவர் ஆதரிக்க முற்பட்டாரென்று கூறும் இவர், வாய் கூசாமல், ஜின்னாவுக்கே பாகிஸ்தான் திட்டம் புரியவில்லை யென்றால், இவர் பிரசங்கத்திறனை என்னென்று சொல்வது. தான் தான் பேச்சில் வல்லவர்; மற்றப் பிரசங்கம் கேட்கும் மக்கள் அறிவிலிகள் என்று நினைத்தார் போலும்! ஜனாப் ஜின்னாஹ்வுக்குப் புரியாத பாகிஸ்தானை இவர் தலைவர் ஆச்சாரியார் எப்படி புரிந்து கொண்டார்? இவர் அவரை ஆதரிக்க, இவர் எப்படிப் புரிந்து கொண்டார்?

### உடனே கொலை.

ஜெர்மானியில் சிறையில் வைக்கப் பட்டிருந்த பிரெஞ்சு இராணுவத் தலைவர் ஜெனரல் ஜிராடு தப்பியோடிய விஷயமாய் விசாரணை செய்ய ஒரு ஸ்பெஷல் கமிஷன் பர்லினிலிருந்து டிரஸ்டென்னுக்கு வந்தது. ஜெனரல் ஜிராடு தப்பியோட உதவிசெய்ததாகவும், ஜெர்மானிக்கு விரோதமான வேலையில் ஈடுபட்டிருந்ததாகவும் 30 பிரெஞ்சு உத்தியோகஸ்தர்கள் குற்றஞ் சாட்டிச் சுட்டுக் கொல்லப்பட்டனர்.

### பெங்களூரில் துப்பாக்கிப் பிரயோகம்.

பெங்களூரில் பத்ராவதி இரும்புத் தொழிற்சாலைத் தொழிலாளிகள் தடை யுத்தரவை மீறி மே தினம் கொண்டாடியதால் ஏற்பட்ட கலவரத்தில் மாஜிஸ்ட்ரேட்டும் ஜில்லா போலீஸ் சூபரிண்ட்டெண்ட், போலீஸ் இன்ஸ்பெக்டர், சப் இன்ஸ்பெக்டர் உள்பட 26 பேர் காயமடைந்ததன் காரணமாய்த் துப்பாக்கிப் பிரயோகம் செய்யத் தொழிலாளர்களில் 3 பேர் மாண்டு 32 பேர் காயமடைந்ததாகச் சொல்லப்படுகிறது.

### மடகாஸ்கரைப் பிரிட்டிஷார் பிடித்தனர்.

மடகாஸ்கர் தீவைப் பிரிட்டிஷ் படைகள் கைப்பற்ற முனைந்ததை ரூஸ்வெல்ட் மனமார ஆதரித்துள்ளார். மடகாஸ்கர் தீவு உலகிலுள்ள பெரிய தீவுகளில் ஐந்தாவதாகும். இதன் மொத்தப் பரப்பு 2,28,000 சதுர மைல். இங்கு 40 லக்ஷம் சுதேசிகளும் 25 ஆயிரம் வெள்ளைக்காரர்களும் வசிக்கின்றனர். வெள்ளைக்காரர்களுள் பெரும்பாலோர் பிரெஞ்சு மக்களே. இங்கு நெல், காபிக்கொட்டை, வாழை, தேன்

காய், ரப்பர், பருத்தி முதலியன முக்கிய விளை பொருள்கள். அன்றி இங்குத் தங்கம், கிராபைட், கந்தகம் போன்ற உலோகங்களும் கிடைக்கின்றன. இங்கிருந்து காப்பி, டப்பிகளில் அடைக்கப்பட்ட இறைச்சி, தோல், சர்க்கரை, கிராம்பு முதலியன பிரான்ஸுக்கு ஏற்றுமதியாய்க்கொண்டிருந்தன. லட்சக்கணக்கான பணச்செலவில் கட்டப்பட்ட ஒரு கடற்படைத் தளம் இங்குண்டு. இதற்கருகில் தான் பிரெஞ்சுக்காரருடைய நீவ்ரே துறைமுகம் இருக்கிறது. இந்து மகா சமுத்திரத்தில் இதுதான் அவர்களுக்குத் தலைமைத் தளமாகும். தூரக்கிழக்குத் திசையிலிருந்து வரும் பிரெஞ்சுக் கப்பல்கள் டைகோசுவாரெஸ் என்ற மடகாஸ்கரின் வடகோடித் துறைமுகத்தை உபயோகப்படுத்தி வந்தன. ஜெர்மானியர் பிரெஞ்சுக் கப்பல்களில் பிரெஞ்சுக்காரர்களைப் போலவும், நடுநிலைமை நாட்டினரைப் போலவும் மாறுவேடம் புனைந்து சுதேசம் சென்றனர். இக்கப்பல்கள் ஜெர்மனிக்குத் தடுக்கப்பட்ட மூலப்பொருள்களையும் ஏற்றிச் சென்று வந்தன. சில மாதங்களுக்கு முன்பு தான் இப்படிப்பட்ட 5 பிரெஞ்சுக் கப்பல்களைப் பிரிட்டிஷார் வழி மறித்துப் பிடித்தனர்.

இன்று பர்மாவை ஜப்பானியர் கொஞ்சம்கொஞ்சமாக ஆக்ரமித்து வருவதால் மத்திய கிழக்குப் பிரதேசத்துக்கு அவர்களால் ஆபத்து அதிகமாகக்கூடும். ஆஸ்திரேலியா, இந்தியா, தென்னாபிரிகா, ரஷ்யா இவைகளின் சப்ளை வழிகளுக்கு ஆபத்துண்டாகாமல் தடுப்பதற்கு மடகாஸ்கரை வசப்படுத்து வது அவசியமாயிற்று. ஜப்பானுக்குப் பயந்து இந்தோ-சீனாவைக் கொடுத்துதவியதுபோல், மடகாஸ்கரையும் அவர்கள் கொடுத்துவிடக்கூடுமாதலால், முன் னெச்சரிக்கையாய் பிரிட்டிஷார் இதைக் கைப்பற்றியது மிகவும் சந்தோஷிக்கத் தக்க விஷயமே.

ஆனால் மடகாஸ்கர் கவர்னர் தாம் சரண் புகப்போவதில்லையென்றும் கடைசிவரை போராடியே தீரப்போவதாகவும் விச்சிக்குத் தெரிவித்துள்ளார். பிரிட்டிஷ் கவசப் படைகள், பாரசூட் படைகள், 2 குரூஸ்ஸர்கள், 4 நாசகாரிகள், 12 துருப்புக் கப்பல்களுடன் பிரிட்டிஷ் படைகள் போரிட்டு இதைப் பிடித்துவிட்டன.

### புது ஜேர்மன் தளகர்த்தர்கள்.

லிபியாவுக்கு ஜெனரல் நேரிஸ், ஜெனரல் பிஸ்மார்க் என்ற 2 புதிய ஜெர்மன் ஜெனரல்கள் வந்திருக்கின்றனராம். ஜெனரல் நேரிஸ் ரஷ்யாவில் போர் செய்தவர்; 'ரஷ்யரைக் கைது செய்யவேண்டாம்; பிடித்தவுடன் சுடுங்கள்' என்று சொன்ன மகா பாபி. இவ்விருவரும் ஜெனரல் ரோமலின் கீழ் வேலை செய்தவர்களாம்.

### அச்சு நாட்டின் நஷ்டம்.

இத்தாலி யுத்தத்தி லிறங்கியதிலிருந்து இதுவரை சுமார் 12½ லட்சம் டன் எடையுள்ள அச்சு நாட்டு வர்த்தகக் கப்பல்கள் மத்தியதரைக் கடலில் மூழ்கடிக்கப்பட்டிருப்பதாகச் சர்க்கார் அறிவிக்கின்றனர்.

### முஸ்லிம் லீக் கருத்து.

அலகாபாத் காங்கிரஸில் மௌலானா ஆஸாத் அவர்கள் காங்கிரஸ் பிரிதிநிதிகளில் 5 பேர் கூடி லீகிடம் சமரஸம் பேச வேண்டுமென்று வாயளவில் சொற்பொழிவாற்றினரே தவிர, அங்கு நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களில் எதிலும் அது வரவேயில்லை. அதைப் பற்றி யாரும் பேசவுமில்லை. ஒரு முஸ்லிம் பெரியாரைப் பெயரளவில் அகில இந்திய காங்கிரஸ் தலைவராக வைத்துக்கொண்டு 9 கோடி முஸ்லிம்களையும் காங்கிரஸ்காரர்கள் ஏமாற்றப் பார்க்கிறார்கள் என்பதை யறிய இஃதுமொரு நல்ல சந்தர்ப்பத்தில் மிக நல்ல உதாரணமாகும். பாகிஸ்தான் சம்பந்தமாய் நாகபுரியின் தீர்மானமே முடிவானது என்று லீக் காரியக் கமிட்டியார் தெரிவித்தனர். அந்த ஆதாரத்தின்மீது காங்கிரஸ் பிரதிநிதிகளைச் சந்தித்துப் பேச ஜனாப் ஜின்னாஹ் எந்தச் சமயமும் தயார் என்கிறார். எதிர்காலக் கோரிக்கைகளுக்குக் குந்தகமில்லாமல், இடைக்கால ஏற்பாடுகள் செய்யப்படவேண்டும் என்பதே லீக் வற்புறுத்தல். ஆனால் மேற்படி எதிர்காலம் சம்பந்தமாக உறுதியளித்து காங்கிரஸ் முன் வந்தால் இடைக்கால ஏற்பாடு சம்பந்தமாக ஜனாப் ஜின்னா அவர்கள் எந்தவிதமான வரையறையையும் விதிக்கமாட்டார். எனவே பாகிஸ்தான் விஷயத்தில் காங்கிரஸ் நடுநிலை வகிக்குமா? அல்லது திரு. ராஜகோபாலாச்சாரியார் விட்டுக்கொடுக்கத் தயாராயிருக்கும் அளவுக்கு முன் சென்று தேசிய சர்க்கார் சம்பந்தமாகத் திட்டம் வகுக்குமா என்பதைக் காங்கிரஸ் தான் முடிவு செய்ய வேண்டுமே தவிர, லீகின் தீர்மானம் எப்பொழுதும் ஸ்பஷ்டமாகவே யிருக்கிறது. நினைத்து நினைத்து எதுவும் அது செய்யவில்லை. வீணாக லீக் மீது தூற்றல் ஏன்?



### ஹிட்லரின் அடுத்த பாய்ச்சல்.

ஹிட்லரின் அடுத்த பாய்ச்சல் காகஸ் மீது இருக்குமாம். ஏனெனில் அங்கு எண்ணெய்க் கிணறுகள் அதிகம். இதோடு பிரிட்டனும் முழு மூச்சுடன் தாக்கப்படலாமென வாஷிங்டனிலுள்ள இராணுவ அதிகாரிகள் கருதுகின்றனர்.

### ரஷ்யாவை ஜப்பான் தாக்கும்.

ரஷ்யாவை ஜப்பான் தாக்கவேண்டுமென்று ஹிட்லர் விரும்புவதாக ராய்டர் நிருபர் எழுதுகிறார். கீழ் ஸைபீரியாவைத் தாக்குமாறு ஜப்பானை ஹிட்லர் வற்புறுத்துகிறாராம். ஹிட்லர் ஐரோப்பாவில் வெற்றியடைவது நிச்சயமாயிருந்தால் தான் ஜப்பான் இதில் இறங்குமே தவிர யோசிக்காமல் இறங்கி விடாது. ரஷ்யரும் ஸைபீரியாவில் நன்றாக அரண் செய்து ஏராளமான டிவிஷன்கள் (படைகள்) வைத்துள்ளனர்.

### ஜேர்மானியர் கொடுமை.

ஹாலந்திலுள்ள ஜெர்மன் அதிகாரிகள், தங்களுக் கெதிராக ரகசிய சூழ்ச்சி செய்ததாக சில ஹாலந்து தலைவர்களை ராணுவ விசாரணை செய்து 72 பேரை சுட்டுக் கொன்றனராம்.

### சென்னையில் சங்கு.

விளக்குகள் எரிந்துகொண்டும், கடைகள் திறக்கப்பட்டும், போன ஜனங்களும், ஆபீஸ்களும் வந்துகொண்டுமிருக்கும் இச்சமயத்தில் திடீரென 6-5-42ல் பகல் 1 மணிக்குச் சென்னையில் அபாய எச்சரிக்கை ஒலித்தது. சென்னைவாசிகள் நடுநடுங்கி விட்டனர். கடைசியில் கேள்

விப்பட்டதில் மின்சாரக் கம்பிகளில் ஏற்பட்ட கோளாறு காரணமாக அஃது ஒலித்து விட்டதாம். உடனே பீதியை ஒழிக்கத்தான் அபாய நீங்கியதான சங்கும் ஒலித்ததாம்.

11-5-42 காலையிலும், 12-ல இரவும், 13-ல மாலையும் ஏ. ஆர். பி. ஒத்திகைகள் அசல்தரமாக நடந்தன.

### பிலிப்பைன் போர் முடிவு.

அமெரிக்கருக்குச் சொந்தமான பிலிப்பைன் தீவுகளில் ஜப்பானியர் ஆக்கிரமிப்பு காரிகடார் பிடிபட்டதுடன் பூர்த்தியாய் விட்டது. காரிகடார் தீவிலுள்ள அமெரிக்க பிலிப்பைன் படைகள் ஜப்பானியரிடம் சரண் புகுந்து விட்டதாக ஆஸ்திரேலியா அறிக்கை கூறுகிறது.

### ஜப்பான் முன்னேற்றம்.

ஜப்பானிய முன்னணிப் படைகள் பர்மாவிலிருந்து சீன எல்லையைக் கடந்து வான்டிங் வெளிப்புறத்தை அடைந்து விட்டதாகச் சீன இராணுவ அதிகாரி அறிவிக்கிறார். ஜப்பானியரின் படைப்பலம் மிக அதிகமென்று இவர் கூறுகிறார். இந்தியா சீனாவின் தொடர்பைத் துண்டிக்க ஜப்பான் நோக்கமாயிருக்கலாம். ஏனெனில் பிறகு அது சீனாவைச் சுலபமாகத் தாக்கமுடியுமன்றோ.

### பிரிட்டிஷ்படை வாபஸ்.

கோவேறு கழுதைகள் பேரிலும் ஆட்கள் பேரிலும் ஏற்றிச் செல்ல முடியாத எல்லாத் தளவாடங்களையும் இழந்துவிட நேரிட்டாலும், பிரிட்டிஷ் துருப்புகளை அவசிய மேற்பட்டால் பர்மாவிலிருந்து வெற்றிகரமாக திரும்ப அழைத்துக்கொள்ளலாமேயென லண்டன் டைம்ஸ் பத்திரிகை தலையங்கத்தில் எழுதுகிறது. ரங்கூன் வீழ்ச்சியிலிருந்து அவர்களுக்குப் புதிய படைகள் எதுவும் அனுப்பப்படவில்லையாம். பர்மா நிலைமை வரவர மோசமாகி வருகிறது.

### ஜப்பான் இந்தியாவைத் தாக்கும்

ஆஸ்திரேலியா வெளி நாட்டு மந்திரியான டாக்டர் இவாட், லண்டனில் பத்திரிகை பிரதிநிதிகளிடம் கூறியதாவது :—ஆஸ்திரேலியா, இந்தியா இரண்டின் மீதும் ஒரே சமயத்தில் பாய்வதற்கான வல்லமை ஜப்பானிடம் இருக்கிறது. ஜப்பான் சமீப காலத்தில் பெற்றுள்ள லாபம் கொஞ்ச நஞ்சமல்ல. சென்ற 5 மாத காலத்தில் பஸிபிக்கில் பெரிய மாறுதல். இவ்வளவு சீக்கிரத்தில் இவ்வளவு பெரிய மாறுதலானது, ஐரோப்பாவில் ஜெர்மானி எய்திய வெற்றிகளால் கூட ஏற்படவில்லை. எனவே ஹிட்லரை மட்டும் கவனத்தில் வைக்காமல் எல்லா எதிரிகளையும் ஏக காலத்தில் எதிர்த்துப் போராடவேண்டும்.

### ஜெர்மன் நஷ்டம்.

ரஷ்யாவிலுள்ள கலினின் போர் முனையில் சென்ற 3 தினங்களாக நடந்த போரில் 1,500 ஜெர்மானியர் கொல்லப்பட்டனர்.

### வெள்ளிக்குத் தடை

யுனைட்டெட் ஸ்டேட்ஸிலிருந்து நடு நிலைமை நாடுகளுக்கென போய் அங்கிருந்து ஜெர்மானி முதலிய அச்சுநாடுகளுக்குப் போவதாகத் தெரிந்து, வெள்ளியை இனி ஐரோப்பாவுக்கு ஏற்றுமதி செய்யலாகாதென யு. எஸ். சர்க்கார் உத்தரவு போட்டுள்ளனர்.



### அமெரிக்க பலம்.

கடற்படையில் மட்டும் இன்று 5 லட்சம்பேருக்குமேல் இருக்கிறார்கள். அடுத்தவருடம் ஜுலை 1வக்குள் அவர்கள் தொகை 10 லட்சமாகும் என யு. எஸ். கடற்படை மந்திரி கர்னல் நாக்ஸ் தெரிவிக்கிறார். மேலும் 'நமது உடமைகள் அனைத்துமே இந்த யுத்தத்தின் முடிவைப் பொறுத் துள்ளது. ஒன்று அவர்கள் (எதிரிகள்) ஒழிய வேண்டும் அல்லது நாம் ஒழிய வேண்டும். இதில் சிறிது கூட விட்டுக் கொடுப்பதற்கில்லை' என்றும் கூறினார்.

அமெரிக்காவில் 6 லட்சம் பேர் கொண்ட ஒரு அமெரிக்க இராணுவம் ஏற்படுத்த நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்டு வருகிறதாம்.

### பிரிட்டிஷ் விமானங்கள்.

பிரிட்டிஷ் விமானங்கள் ஜெர்மானி மீதும், ஹாலந்து நார்வே கரைகளிலுள்ள எதிரிக் கப்பல்கள் மீதும் ஓயாது படையெடுத்துத் தாக்கியவண்ணமிருக்கின்றன. ஜெர்மன் விமானங்களும் அடிக்கடி பிரிட்டன் மீது வந்து குண்டுகளை வீசிப் போகின்றனவாம்.

### மடகாஸ்கர் மக்கள் பிரிட்டிஷாரை வரவேற்கின்றனர்.

மடகாஸ்கரிலுள்ள பிரெஞ்சுப் படை பெரிய படையல்லவென்றும், கொஞ்சம் இருப்பதும் பல விடங்களிலும் சிதறுண்டு கிடப்பதாகவும் தெரிகிறது. விமானமும் இல்லையாம். அவ்வூர் சுதேசிகளும் பிரிட்டிஷாருக்கு விரோதமாக இருக்கமாட்டார்களென்பதும் நிச்சயம். எனவே சிறிய எதிர்ப்பு இருந்தாலும் மடகாஸ்கரைப் பிரிட்டிஷார் பிடித்ததாகவே தீர்மானித்துவிடலாம். இதுபோனாலும் இந்துமகா சமுத்திரத்தில் கோமோரோ, ரியூனியன் தீவுகள் பிரெஞ்சுக்காரர்களுக்குச் சொந்தமானவை யுள்ளன. அதன் கதி யாதாகுமோவென லவால் கவலைப் படுகிறாராம்.

### மடகாஸ்கர்.

மடகாஸ்கரில் 9 துறைமுகங்களும், 100 விமானமிறங்கு மிடங்களும் உள்ளன. 16,000 மைல் நீளமுள்ள ரஸ்தாவும் 500 மைல் ரயில் பாதையும் இருக்கிறது. கால்நடை, நெல், சர்க்கரை, காபி, புகையிலை, சோளம் அதிகம். சில பிரிட்டிஷ் பாதிரிகளும் வியாபாரிகளும் உள்ளனர். 38 லட்சம் மக்கள் இருக்கின்றனர். 50 வருடமாகப் பிரெஞ்சு ஆட்சிக்குட்பட்டிருக்கிறது. ஸ்திரீகளுக்கு ஆடவருக்குச் சமமான அந்தஸ்து இருக்கிறது. உலோகம் ஏராளம். 70 லட்சம் கால் நடைகள். மாதம் 1,000 டன் கரும்பு விளையும். பீன்ஸ், காபி, சாராயம், ஏராளம். 20,000 பிரெஞ்சுக்காரர்களும், 10,000கலப்பட ஐரோப்பியரும், 15,000 சீனரும், 15,000 இந்தியரும் இருக்கின்றனர். பூமி குளிர்ச்சியானசிதோஷ்ண ஸ்திதி.

மடகாஸ்கரில் பிரெஞ்சு எதிர்ப்பு நின்று விட்டது. பிரெஞ்சு கடற்படைத்தலைவரும் ராணுவத் தலைவர்களும் கைதியானார்கள். சேனாதிபதிக்குக் காயம். துறைமுகம் பிடிக்கப்பட்டது.

### ஜப்பான் நரி ?

“ ரஷ்யா தோல்வியுற முடியாது” என்று ஜப்பானிய வெளிநாட்டுக் காரியாலய அதிகாரி ஒருவர் தெரிவித்தாராம். எனவே நாஸிகளால் சோவியத் இராணுவ பலத்தைக் குலைக்கமுடியும் என்று நிச்சயமாகத் தெரியாதவரை ரஷ்யாவை ஜப்பான் விரோதித்துக் கொள்ளாது என்று ஓர் இராணுவநிருபர் எழுதுகிறார். என்றாலும், மத்தியக் கிழக்கில் உள்ள பிரிட்டிஷாருக்கு இந்தியத்துருப்புக்கள் அளித்து வரும் உதவியைக் குறைத்தால் ஹிட்லருக்கு உதவி செய்ததாயிருக்கும் என்றே ஜப்பான் பர்மாவைப் பெருவாரியாகத் தாக்கி வருகிறதென்றும் அவர் கூறுகிறார்.

### அரிசிக்குக் குறைவில்லை.

இவ்வருடம் குருவை சம்பா சாகுபடியைச் சீக்கிரம் ஆரம்பிக்க வேண்டியதை முன்னிட்டும், அதிகமான பிரதேசத்தைக் குருவை சாகுபடிக்குக் கொண்டு வரவேண்டியதை முன்னிட்டும் 17-5-42 லேயே மேட்டூர் அணை திறக்கப்பட்டு டெல்டாவிலுள்ள எல்லா ஆறுகளிலும் ஜலம் விடப்படும். காவேரி முதலிய ஆறுகளில் 23-5-42-ல் ஜலம் வந்து விடலாம்.

### திரு. ராஜகோபாலாச்சாரியார் ஸோல்ஜராகிறார் !

‘ ஆயுதங்கள் கொண்டு எதிரியை எதிர்ப்பது சுலபம். சாத்விக ஒத்துழையாமை யென்றால் கோரமான முறையில் எதிரிக்குப் பணிந்துவிடுவோம் என்றே அர்த்தம்; இந்தக் கருத்தை நான் ஏற்கவில்லை’ என்று, எல்லாவற்றையும் அஹிம்சை முறையாலேயே ஜெயிக்கலாம் என்று ஓயாது கூறியும் வரைந்தும் வரும் காந்திஜீயின் சம்பந்தி திரு. ஸி. ராஜகோபாலாச்சாரியார், ‘மகாத்மா காந்திக்கு ஜே! அஹிம்சையே எங்கள் வாழ்க்கை! அதுவே பரம தர்மம்!’ என்றெல்லாம் சொல்லி ஓட்டுக்களைப்பெற்று, இன்று முற்றிலும் மாறாக தம் குருவுக்கே எதிராக போர் வீரராகக் கிளம்பிவிட்டாரென்றால் காலநிலையின் மாறுதலை எனனென்றியம்புவது. கொஞ்சம் தட்டிப் பேசினால் இதற்கு வேறொரு குட்டிக்கதைச் சொல்லிப் பட்டண மக்களை ஏய்த்தாலும் ஆச்சரியமில்லை. ஆனால் இச்சமயம்தான் முஸ்லிம்கள் உஷாராயிருக்கவேண்டும்.

### ரஷ்யாவுக்கு அமெரிக்க உதவி.

ரஷ்யாவுக்கு அமெரிக்க உதவிகள் பாரசீகம் வழியாகப் போகின்றனவாம். இவ்வழியாக யுத்தத் தளவாடங்கள் மட்டுமின்றி, பதனிட்ட தோல், கோதுமை, சணல், அரக்கு, கம்பளி, ஈயம், கொய்னா, ரப்பர், ரசம், தகரம், பித்தளை, சர்க்கரை, தாமிரம், அலுமீனியம் ஆகிய பொருள்களும் போய்ச் சேருகின்றன.

### சென்னைக்கு ஆபத்து குறைவு.

‘ சென்னை மாகாணத்துக்கு ஆபத்து குறைந்துகொண்டு வருகிறது. கஷ்டங்களை வென்று விடலாம்; ஏராளமான யுத்த தளவாடங்கள் இங்கு வந்து குவிந்து கொண்டேயிருக்கின்றன. நாம் எதற்கும் ஆயத்தமாயிருக்கவேண்டும். நிச்சயமாக நமக்கே வெற்றி, சந்தேகமில்லை’ என்று மேன்மை தங்கிய சென்னைக் கவர்னர் 27-4-42-ல் ரேடியோ பிரசங்கம்புரிந்தார். இவர் பிரசங்கத்துக்குப் பின் ஜனங்கள் சிலர் சென்னையில் குடும்பம் நடத்தத் துணிந்து வருகின்றனர். கடைகளும் பல தினமும் திறக்கப்பட்டு வருகின்றன.



### ஜின்னாஹ் நபியா ?

தமிழ்த் தினசரியான சு. மி. 6-4-42-ல் உப தலையங்கத்தில் ஜனாப் ஜின்னா அவர்கள் அலஹாபாத்தில் பத்திரிகைக்காரர்கள் கூட்டத்தில் உள்ளூர நல்லெண்ணத்தோடு மனம் விட்டுத் தந்தை பிள்ளைகளுக்குச் சொல்லும் புத்திமதிபோல் ‘ நான் சொல்லும் உண்மையின் பெருமை யாருக்குத் தெரியும் ? இன்றில்லாவிடினும் பிற்காலத்திலாவது என் சொல்லின் பெருமை உங்களுக்குத் தெரியப் போகிறது’ என்று சொன்னதை, ‘ என் பெருமை யாருக்குத் தெரியும்? இன்றில்லாவிடினும் பிற்காலத்திலாவது என் பெருமை உங்களுக்குத் தெரியும்’ என்று அவர் தம்மை நபியாகப் பாவித்துக் கொண்டு நபி பாஷையில் பேச இறங்கி விட்டாரென ஏளனம் செய்து தாறுமாறாக எழுதியிருந்தது. முஸ்லிம்களுக்குத் தக்க பத்திரிகை யில்லாக் குறையால் அதற்கு அன்றே விரிவான பதில் எழுத முடியவில்லை. என்றாலும் அதே பத்திரிகை சரியாக 1 மாதத்துக்குப்பின் 5-5-42-ல் ஜனாப் ஜின்னாஹ் அவர்களின் பாக்கிஸ்தானை திரு.ராஜகோபாலாச்சாரியார் ஆதரித்ததைத் தானும் ஆதரித்துத் தலையங்கம் எழுதி யிருக்கிறது. ‘ஜனாப் ஜின்னாஹ் அவர்கள் பிடிக்கும் குடை வெயிலுக்கும் உதவாது மழைக்கும் உதவாது’ என்று கேலி செய்த அதன் ஆசிரியர் இன்று இவ்வுஷ்ணமான சித்திரை (மே) மாதத்தில் ஜனாப் ஜின்னாஹ் குடையின் கீழ் திரு. ஆச்சாரியாரோடு சேர்ந்து நிழல்தேட வருவானேன்? இந்தப் பின்புத்தி முன்னாடியே ஏன் இல்லை? எனவே ஜனாப் ஜின்னாஹ்வின் குடை இவருக்கும் இவரைப்போன்ற எல்லோருக்கும் நல்ல நிழல்தரும் குடையென்பதை இனியாவது இவர் அறியட்டும்.

### ஜின்னாஹ்வுக்குச் சீனாப் பரிசுகள்.

சீனமுஸ்லிம் சம்மேளனத் தலைவர்கள் சீனாவிலிருந்து பல அரிய சன்மானங்களைச் சீனா முஸ்லிம்களின் சார்பாக காயிதே ஆஜம் ஜனாப் ஜின்னாஹ் அவர்களுக்கு அளிப்பதற்காக இந்தியாவிக்கு விஜயஞ் செய்துள்ளனர்.

### லீக்தான் உலகசமாதானத்தை ஏற்படுத்தும்.

ஆங்கில முஸ்லிம் மிஸ்டர் ஸென்ட் ஜான் பில்பி, லண்டனிலுள்ள முஸ்லிம் சங்கத்தில் பேசுகையில், ‘ இந்திய முஸ்லிம்களின் கோரிக்கைகள்தாம் உலக சமாதானத்தை ஏற்படுத்தும்’ என்று பகிரங்கமாகக் கூறினார்.

### சீன பாஷையில் குர்ஆன்.

சீன தேசிய இஸ்லாமிய சம்மேளனத்தார் குர்ஆனை அரபி பாஷையிலிருந்து சீன பாஷையில் மொழிபெயர்க்கத் தீர்மானித்திருக்கின்றனர். சீனாவில் இஸ்லாம் பரவி 1300 வருடமாயினும் சீனபாஷையில் குர்ஆன் இல்லை. 20 லட்சம் சீன முஸ்லிம்களுக்குள்ள அக்கறை தமிழ்நாட்டிலுள்ள 250 லட்சம் தமிழ் முஸ்லிம்களுக்கு 1361 வருட-

மாயும் கூட இல்லையென்றால் இஃது பெரிதும் வருந்தத்தக்கதே.

ஹிட்லருக்கு ரஷ்ய இராணுவம்!

ஹிட்லர், லிபியாவிலுள்ள தமது படைக்கு ரஷ்யரிடையே கட்டாய முறைப்படி ஆள் சேர்த்து வருவதாகச் சோவியத் செய்தி ஸ்தாபனம் அறிவிக்கிறது. சேர மறுக்கும் ரஷ்யருக்கு மரண தண்டனை விதிக்கப்படுமெனப் பயமுறுத்தப் படுகிறது. இராணுவ நிலையங்களிலிருந்து தப்பியோட முயன்ற பல ரஷ்யர் சுட்டுக்கொல்லப் பட்டனராம்.

இலங்கையில் கோரில்லாச்சண்டை.

இலங்கையிலுள்ள துருப்புக்களுக்குக் கொரில்லாச் சண்டை சம்பந்தமாகப் பயிற்சி அளிக்கப்பட்டு வருகின்றது.

நிற பேதமா?

ஹாங்காங், மலேயா, பர்மா முதலிய விடங்களிலிருந்து வெளியேறியவர்களின் ஜாபிதாவை எடுத்தால், இந்த நாட்டில் உத்தியோகம் பெற்றவர்களில் ஐரோப்பியர் தொகை தான் அதிகமாயிருக்கிறதாம். இந்தியர்களுக்கு, அவர்கள் எப்படிப் பட்ட அந்தஸ்துடையவர்களாயிருந்தாலும் தனி ரோட்டும், 3-வது வகுப்பு டிக்கட்டுமாம். ஐரோப்பியருக்கும், ஆங்கிலோ-இந்தியருக்கும், ஆங்கிலோ-பர்மியருக்கும் இண்டர் கிளாஸ் டிக்கட்டாம்; நல்ல உடையாம், பாதரட்சையாம்!

பர்மாவைத் தாண்டி சீனுவுள் ஜப்பானியர் பிரவேசம்.

பர்மா ரஸ்தா வழியாக வடகிழக்கு நோக்கி ஜப்பானியர் முன்னேறி வருகின்றனராம். யூனனின் பல பாகங்கள் மீதும் ஜப்பானியர் விமானங்கள் குண்டுகள் வீசுகின்றன. சீன அமெரிக்கா விமானப் படைகள் அவைகளை எதிர்த்துப் பல விமானங்களை வீழ்த்தி வருகின்றன. சீன உதவிப் படைகளும் வந்து குவிகின்றனவாம். ஏராளமான யந்திர சாதனப்படைகள் உள்பட ஏராளமான உதவிப்படைகளை ஜப்பானியரும் யூனன்-பர்மா போரில் கொண்டுவந்து குவிக்கின்றனர்.

இந்தியாவில் போரில்லை.

ஜப்பானியர் இதுவரை பிடித்த பிலிப்பைன்ஸ், மலேயா, டச்சுக் கிழக்கிந்தியத் தீவுகள், பர்மா ஆகிய இடங்களில் தாங்கள் பலப்படுத்திக் கொண்டு சீனுவின் எதிர்ப்பை அடியோடு குலைக்க அவர்கள் முழுப் பலத்துடன் சீனுவைத்தாக்க முற்படுவர் என சீனர்கள் அபிப்பிராயப் படுகிறார்கள். எனவே இந்தியா, ஆஸ்திரேலியாமீது ஜப்பானியர் இச்சமயம படையெடுக்க முயற்சிக்கமாட்டார்களாம்.

வடகிழக்கு இந்தியாவில் பலத்த இராணுவ ஏற்பாடு.

வெள்ளம் போன்ற மஞ்சள் (ஜப்பானியப்) படைகள் பர்மாவை ஆக்கிரமித்து வருவதால் வடகிழக்கு எல்லைப் பக்கத்தில் இந்தியா மிகுந்த கவலை செலுத்த ஆரம்பித்துள்ளதாம். அதற்கேற்ற மாதிரி சிட்டகாங்கிலும், அஸ்ஸாமிலும் குண்டுகள் வீசினர்.

ரஷ்யாவுக்குச் சப்ளை.

ஆர்க்டிக் கடல் வழியாக ரஷ்யாவுக்கு யுத்த தளவாடங்கள் ஏற்றிக் கொண்டுபோய்த் திரும்பின பிரிட்



டிஷ் கப்பல்களை ஜெர்மன் கடற்படையும், விமானங்களும் தாக்கி 10,000 டன்னுள்ள எடின்பர்க், என்ற குரூஸரையும், 3 பிரிட்டிஷ் கப்பல்களையும் மூழ்கடித்தன். ஜெர்மானியர் ஒரு நாசகாரியை இழந்தனர்.

ஜப்பான் நிபந்தனை.

கரிகிடார் சரணடைந்த போது கடற்படையைச் சேர்ந்த 3845பேர், ராணுவத்தைச் சேர்ந்த 3734பேர் உள்பட 11574பேர் ஜப்பானியரால் சிறைப்படுத்தப் பட்டனராம். மேற்கொண்டு மற்ற தாக்குதல்களையும் நிறுத்த வேண்டுமாயின், பல்வேறு தீவுகளிலுள்ள அமெரிக்க-பிலிப்பைன் துருப்புக்களும் அடியோடு சரணடைந்து விடவேண்டுமென ஜப்பானியர் வற்புறுத்துகின்றனர். ஜெனரல் வெயின்ரைட் வேறுவழியின்றி அந்நிபந்தனையை ஒப்புக்கொண்டு தமது தளகர்த்தர்களுக்கெல்லாம் உத்தரவும் பிறப்பித்து விட்டார்.

ஜப்பான் ஓட்டம்.

வடகிழக்கு ஆஸ்திரேலியாவுக்ருகே பவழக்கடலில் படையெடுப்புக்கான முஸ்தீபுடன் திரண்டிருந்த ஒரு பெரிய ஜப்பானியக் கடற்படையை ஆங்கிலோ-அமெரிக்கக் கடற்படைகள் சிதறடித்து விட்டனவாம். பாக்கி எதிரிக் கப்பல்கள் ஓட்டம் பிடித்தனவாம். ஸராடோகா என்ற 830 அடி நீளமும் 33000 டன் நிறையுமுள்ள பெரிய யு. எஸ். விமானந் தூக்கிக் கப்பலை ஜப்பானியர் மூழ்கடித்த தாகவும், ஆங்கிலோ-அமெரிக்கக் கப்பற் படைகளுக்குப் பெரிய சேதம் உண்டுபண்ணி விட்டதாயும் ஜப்பானியர் பொய்ப்பிரசாரம் செய்கின்றனராம். அப்படிப்பட்ட கப்பலொன்றும் மூழ்கவில்லை, பெருநஷ்டமுமில்லையென ராணுவத் தலைவர் அறைகிறார். அதற்குமாறாக இப்பவழக் கடல் யுத்தத்தில் 9 ஜப்பானிய யுத்தக்கப்பல்களையும் 2 சாதாரணக் கப்பல்களையும் மூழ்கடித்ததாகவும், 4 யுத்தக் கப்பல்களுக்கும் 2 சாதாரணக் கப்பல்களுக்கும் சேதமென்றும் அமெரிக்க அதிகாரிகள் அறிவிக்கின்றனர்.

சிட்டகாங்கில் குண்டு வீச்சு.

8-5-42 பிற்பகலிலும், 9-5-42 காலையும் ஜப்பானியர் மிக்க உயரத்தில் பறந்து சிட்டகாங் மீது குண்டுகளை வீசினர். இயந்திர பீரங்கிப் பிரயோகமும் நடந்தது. சொற்ப சொத்துச் சேதமும், உயிர்ச் சேதமும் ஏற்பட்டது. (சிட்டகாங் வங்கமாகாணத்தைச் சேர்ந்த ஒரு துறைமுகம். பர்மா எல்லையை ஒட்டின ஜில்லா. அக்யாபிலிருந்து 190மைல். சிட்டகாங்கிலிருந்து கல்கத்தா 370மைல். ஜப்பானியர் சென்ற 6-4-42-ல் விசாகப்பட்டினம் காகிநாடாமீது குண்டு வீசியதற்குப் பின், சிட்டகாங் 3-வது நகரம்.)

விஷ வாய்வு.

7-5-42-ல் கிரிமியன் யுத்த அரங்கத்தில் ஜெர்மன் துருப்புக்கள் விஷவாயு கலந்த சுரங்க வெடிகளை உபயோகித்தனவாம். அதைப் பரிசோதித்ததில், மூச்சுவிடும் பிராணதார உறுப்புக்களை அவ்விஷவாயு மிகவும் பாதித்ததாகத் தெரிய வந்தது. மூச்சு விடவே முடியவில்லையாம்.

ஹிட்லர் இப்படிச் செய்வாராயின், தானும் அதைவிட மோசமான விதத்தில் விஷவாயுக்களைப் பிரயோகித்து ஜெர்மானியை அடியோடு நாசஞ் செய்துவிட முடியுமென சர்ச்சில் எச்சரிக்கிறார்.

### ஜப்பான் ஜரூர்

அடுத்த மாதம் ஜப்பானியர் ஸைபீரியாமீது படையெடுப்பரெனத் தெரிகிறது. வட சீனாவிலிருந்து ஜப்பானியப்படைகளை அதிவேகமாக மஞ்சூரியாவுக்குக்கொண்டுபோய்ச் சேர்த்து வருவதாகத் தெரிகிறது. ஹிட்லர் ஜப்பானைக் கேட்டுக் கொண்டதற் கிணங்க ஜப்பான் ரஷ்யாவைத் தாக்க இஃது ஏற்பாடுகள் போல் தெரிகிறது.

### ஜப்பான் நஷ்டம்.

தென்மேற்கு பஸிபிக் கடற்போரில் ஜப்பானியர் 18 கப்பல்களை இழந்தனராம். 4 கப்பல்கள் சேதமுற்றனவாம்.

### இலங்கையில் துருப்புக்கள்.

இலங்கைக்கு, கிழக்காபிரிக்காவிலிருந்து பிரிட்டிஷ் துருப்புக்கள் வந்திருக்கின்றன. இவர்கள் அதிக அனுபவமுள்ளவர்கள். அபிஸீனியப் போரில் முழு வெற்றி பெற சண்டையிட்டவர்கள்.

### ஸ்திரீ விமானிகள்.

அமெரிக்காவில் 3000க்கு மேற்பட்ட ஸ்திரீ விமானிகள் தயாராயிருக்கின்றனராம். இத்தொகை இன்னும் பெருகி வருகிறது.

### யு. எஸ். வைஸ் பிரஸிடெண்ட் எச்சரிக்கை.

இன்னும் 6 மாதத்துக்குள் ஜப்பான், ஜெர்மனி இரண்டும் ஒன்று சேர்ந்து அமெரிக்காவை இரண்டு பாகங்களில் கட்டாயம் தாக்கப் போகிற தென ஷி ஹென்ரி வாலஸ் எச்சரித்திருக்கிறார்.

### ஒரு ஜதை பூட்ஸ் 22 பவுன்!

கிரீஸில் ஜெர்மானியர்கள் செய்யும் கொடுமை வெகு அதிகமாம். அங்கு ரோட்டுகளின் பெயர்களுக்கெல்லாம் வேறு பெயர்கள் இடப்பட்டன. ஜனங்கள் பசியாலும் குளிராலும் இறக்கின்றனர். ஒரு ஜதை பூட்ஸ் வாங்க 22 பவுன் வேண்டியிருக்கிறது. ஒரு பெண்மணி ஒரு சாக்கு (மூட்டை) மாவு வாங்கத் தன் வீட்டையே விற்றாளாம்!

### மரங்களை வெட்டக்கூடாது.

இராணுவ சாதனங்களை மறைத்துவைப்பதற்கும் எதிரி விமானங்கள் கீழே இறங்கத் தடங்கல் செய்வதற்கும் உதவியாயிருக்க மரங்களையும், கிளைகளையும் வெட்டக்கூடாதென சென்னை சர்க்கார் அறிக்கை விட்டிருக்கின்றனர்.

### பெண்கள் படை.

சென்னையில் 18-வயதுக்கு மேற்பட்டு நல்ல ஆங்கில ஞானம் பெற்ற பெண்மணிகளின் உதவிப் படையொன்று திரட்டப்படுகின்றது.

### ஏ. ஆர். பி. க்கு ரூ. 82,000.

சில செலவுகளைக் குறைத்து A. R. P. செலவிற்காக சென்னைக் கார்ப்பரேஷன் ரூபாய் 82,000 ஒதுக்கி வைத்துள்ளது.

### துருக்கிக்கு ஆசை காட்டல்.

இம்முறை ரஷ்யாவை ஒரே சமயத்தில் எதிரிலும், பின்புறத்திலும்,



பக்க வாட்டத்திலும் தாக்க ஜெர்மானியர் தீவிரமாக ஏற்பாடுகள் செய்திருக்கின்றனர். அவர்கள் இப்போது துருக்கியைச் சமரஸத்துக்கு அழைக்கின்றனர். துருக்கிக்கு கிரேக்கப் பிரதேசங்களை வழங்கி, மத்தியக் கிழக்கில் துருக்கிக்கே சர்வாதிகாரமும் தரவும் தயாராயிருக்கின்றனர். எப்படியாவது ஜெர்மானியும், ஜப்பானும் ஒரே சமயத்தில் ரஷ்யாவைத் தாக்கலாமென மாஜி யு. எஸ். தூதர் கருதுகிறார்.

### மோமின்கள் தலைவரும் ஜின்னாவே.

மோமின்கள் ஒரு மகா நாடு கூட்டி 'ஜின்னாஹ் முஸ்லிம்கள் பிரதிநிதியல்ல' என்ற தீர்மானம் நிறைவேற்றி பிரிட்டிஷ் பிரதம மந்திரி முதல் யாவருக்கும் தந்தி மூலம் தெரிவித்ததாகப் பல தினசரிகளில் வெளிவந்த செய்தி எல்லோருக்கும் தெரியும். இப்பொழுது அலஹாபாத்தில் ஆயிரக்கணக்கான அன்ஸார்களும் மோமின்களும் அவரை வெகு ஆடம்பரமாக வரவேற்று, அவரே தங்கள் தலைவரென ஓர் உபசாரப் பத்திரமும் வாசித்துக் கொடுத்துள்ளார்கள். எனவே முன் மகாநாட்டின் யோக்யதையையும், அதை இந்துப் பிரசாரகர்கள் பெரிதாக உபயோகப் படுத்திக் கொண்ட நேர்மையும் நன்கு விளங்குகிறதன்றோ.

---

# :: அன்வரின் மலாயா பிரயாணம் ::

## ANVAR'S MALAYAN TOUR

அ. பீ. மு. அலாஉதீன்

[முன் தொடர்]

அன்வர் தனது மனைவியைத் தெரிந்து கொள்ளவே இல்லை. மணமகளின் பெயரும் அவனுக்குத் தெரியாது. தற்கொலை செய்து கொள்ளப்போவதாக தனது தாயாருக்கு எழுதிய தீமாவுடைய கடிதத்தையும் அன்வர் பார்க்கவில்லை. மணமகள் ஒரு விதவை; யௌவனக் கட்டழகி; ஒரு கிழவனை மணக்க மறுக்கிறாள். இவைகளே அன்வர் தெரிந்த விபரம். அவன் தனது நண்பன் சதாசிவத்துடன் கலந்த தீர்மானத்துடனேயேதான், அவன் தீமாவுக்கு உதவ முன் வந்தான். தீமா, தனது கடிதத்தில் குறிப்பிட்டபடி, கலியாணம் நடக்க இருந்த இரவு சதாசிவத்தின் வீட்டுக்கு வந்து சேர்ந்தாள்.

கலியாணப் பெண் காணாமற் போனதைப்பற்றிப் பொலீசார்களின் விசாரணையில் தீமாவின் கடிதம் போதிய ஆதாரத்துடனிருந்தும் அன்வரிடம் அவர்களுக்கு ஏதனாலோ சந்தேக மிருந்துகொண்டே வந்தது. அதனால் அவனிருப்பிடத்தைக் கண்காணித்துக் கொண்டே வந்தார்கள்.

அன்வர் இருப்பது சதாசிவத்துடைய மாளிகையில் ஒரு அறை. அன்வர் அவ்வறையில் இரவிலே தான் தங்குவான். பகலிலே பல கிராமங்களில் சுற்றித்திரிவான். அவன் அப்படிப் போய் வருவதின் காரணம் சதாசிவம் ஒருவருக்குத் தான் தெரியும். சில சமயங்களில் சதாசிவமும் அன்வர்தீனும்சேர்ந்து போய் வருவார்கள். எங்கே போகிறார்கள்? எதற்காகப் போகிறார்கள்? என்ற விபரம் பொலீசார்களின் சந்தேகத்துக்குப் பெரிய துணையாக இருந்தது. அவ்விருவர்கள் மேலும் பொலீசார்கள் கவனம் செலுத்தி வந்தார்கள்.

தீமா தனது கணவன்மேல் கண்ணாயிருந்தாள். அவர் பகலிலே பல கிராமங்களைச் சுற்றித் திரிந்து வருவதைத் தெரிந்தாள். அதன் உண்மையை ஒருவாறு யூகித்துக் கொண்டாள். அவள் தனது கணவனிடம் 'தாங்கள் என் கணவர்; நான் உங்களின் மனைவி; உங்களின் அடிமை; தங்களைச் சதா பூஜிக்கும் தாசி. உங்களையே நினைந்துருகி துடித்துக் கொண்டிருக்கும் இந்த ஜீவனைத் தாங்கள் தெரிந்து கொள்ள வில்லையா?' என்று அவர் எதிரே நின்று கேட்டுவிட அவள் மனம் தூண்டித் துன்புறுத்திக் கொண்டிருந்தது. "அவர் என்னைக் கண்டவுடன் 'நீ தீமா அல்லவா?' என்று சொல்லி உடனே ஏற்றுக் கொண்டு விட மாட்டாரா? ஒருக்கால் அவர் என்னை அன்னிய ஸ்திரீ என்று கருதி அலட்சியம் செய்து விட்டால் ......? பத்து வருஷத்துக்கு முன்னிருந்த என் முகக்சாயல் இப்பொழுது அவரால் கொஞ்சங்கூடத் தெரிந்து கொள்ள முடியாதா? ஏன் நான் அவ்வளவு மாறிவிட்டேனா? முன்பு இருந்ததை விட இன்று என் மனம் அவரிடம் எவ்வளவு ஐக்கியப்பட்டு லயித்து இருக்கிறது. அதை அவர் தெரிந்து கொள்ள முடியாதா? அவரிடம் நான் எப்படி உண்மையைக் கூறுவேன்? அப்படிச் சொன்னால், அவர் என்னை நாணமற்றவளென்று கருதி விடுவாரோ? ஹா! தயாபரா! இதற்கு நீதான் துணை செய்ய வேண்டும்" என்று அவளுடைய மனம் பலவாறு அல்லல் பட்டுக் கொண்டிருந்தது. இறுதியாக அவள் ஒரு தீர்மானமும் செய்து கொண்டாள்: தனது கணவருக்கு எச்சரித்தல் வேண்டி, ஒரு சிறிய துண்டுத்தாளில் "உங்களின் மனைவியைத் தேடவேண்டாம். இதே வீட்டிலே அவள் இருந்து வருகிறாள்!" என்பதை எழுதி அவருடைய மேஜைமேல் வைத்துவிட்டு வந்து விட வேண்டுமென்று எண்ணினாள். அதைச் செய்யவும் முனைந்தாள்.

அன்று அன்வர் வெளியில் சென்றவன் சீக்கிரமாகவே திரும்பி வந்து விட்டான். பொலீசார்கள் பெண்ணிருக்குமிடம் தெரிந்து கொண்டு விட்டார்களென்னும் தகவலே அவனை அவ்வளவு துரிதமாக சதாசிவத்தின் வீட்டிற்குத் திரும்பும்படிச் செய்தது.

அவன் தனதறையின் வெளிவராந்தாவில் சிந்தனையுடன் உலாவிக் கொண்டிருந்தான். அப்பொழுது அவன் எதிர்பாராதக் காட்சி ஒன்றைக் கண்டான். ஒரு அழகிய வனிதை தனதறையில் நுழைந்து ஏதோ ஒன்றை மேஜை மேல் வைத்து விட்டுத் திரும்புவதைப் பார்த்தான். அவள் தனது மேஜை மேல் வைத்தது என்ன? ஒரு கடிதமென்பதைத் தெரிந்து கொண்டான்.

அவள் யார்? தீமா! அன்வர் அவளைத் தெரிந்துகொள்ள வில்லை. எங்கயோ பார்த்த முகம்; ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். அவர்களின் பார்வையிலே ஒரு மாசற்ற கவர்ச்சி இருந்தது. அன்வர் அவளை, தடைப்பட்டக் கலியாணப் பெண் என்பதை யூகித்தறிந்து கொண்டானே தவிர அவள் தனது மனைவி என்பதை அவனுடைய சிந்தனையில் சிறிதும் எண்ணவில்லை. அந்த அன்னியப் பெண் தனது அறைக்கு வந்து ஒரு கடிதத்தை வைத்துப் போக வேண்டிய அவசிய மென்னவாக இருக்கலாம்? என்று அன்வர் சிந்திக்கும்போது, அந்தப் பெண், மேஜைமேல் வைத்தக் கடிதத்தைத் திரும்ப எடுத்துக் கொண்டு அறையை விட்டு வெளியேறினாள். அவளைப் போகவிடாமல் தடுத்து அன்வர் "எனக்கு வந்த அக்கடிதத்தைத் திரும்ப எடுத்துக் கொண்டதேன்?" என்று அவளை வினவினான்.

தீமா அக்கடிதத்தை அன்வருக்குத் தெரியாமல் அவனுடைய மேஜைமேல் வைத்து விட்டுப் போக வந்தாள். ஆனால் அவள் மேஜை மேல் கடிதத்தை வைத்துவிட்டுத் திரும்பும்போது அன்வர் புன்னகையுடன் நின்று கொண்டிருந்ததால் அவளுக்கு வெட்கமாய் இராதா என்ன? அவளை அறியாமலே அவளுடைய கரங்கள் அக்கடிதத்தை எடுத்துக் கொண்டன. மேலும் அவள் அன்வரின் கேள்விக்குப் பதில் கூறினாள்:

"இக்கடிதம் உங்களுக்கு வந்ததாக எப்படிச் சொல்லலாம்?" தீமாவின் தொனியில் ஒரு சாகச இன்பம் பிரதிபலித்தது.

"என்னுடைய மேஜைக்கு வந்தக் கடிதம் என்னுடையதல்லவா?"

"உங்களுடைய மனைவி மற்றொருவருடைய மனையில் இருந்தால், அவள் அவ்வீட்டார்களின் பெண்ணாகிவிட முடியுமா?"

இந்தப் பதில் அன்வரைத் தூக்கி வாரிப் போட்டது. அதனால் அவனுக்குப் பதில் சொல்ல முடியவில்லை.

"உங்களுடைய மனைவி இன்னொருவர் வீட்டில் இருக்கிறாளென்று கற்பனை செய்து பார்க்கக்கூட உங்களுக்குப் பயமா யிருக்கிறதா?"

"கற்பனை செய்து பார்க்கப் பயமா யில்லை; உன் பதிலைப் பார்க்க ஆச்சரியமாக இருக்கிறது."

"எதனால்?"

"என் மனைவி மற்றொருவர் வீட்டுக்கு எதற்காகப் போகிறாள்?"

"தாங்கள் தங்களின் மனைவியை நடுச்சந்தியில் விட்டு அயல் நாடு சென்றால் அவள் என்ன செய்வாள்?"

"அவளுக்குப் பிறந்தக மில்லையா ...............?" அன்வரின் சிந்தனை எங்கெங்கெல்லாம் சென்று வந்தது. இவள் கூறுவதின் கருத்தென்ன? என் மனைவியை நடுச்சந்தியில்...? ஆம்! என்னை ஒருக்கால் இவள் தெரிந்திருப்பாளோ?"

"பிறந்தக மென்ன? அப்பெண்ணின் பெற்றோர்கள் மாப்பிள்ளை கடலில் விழுந்து இறந்ததாகச் சொல்லி அவளுக்கு. மறுமணம் செய்துவைக்க முயலுகிறார்கள். அதற்கு உங்களின் மனைவி – உங்களுக்குப் பிறகு ஒருவரையும் மணக்க முடியாதென்று கூறி–மற்றொருவர் வீட்டில் அடைக்கலம் புகுகிறாள். அதில் தவறு காணமுடியுமா? நீங்கள் அயல் நாட்டிலிருந்து திரும்ப வரும் போது உங்களின் மனைவி உங்களிடம் வந்து சேர்ந்து விடுவாள். அம்மாதிரி என் கடிதம் என்னிடம் திரும்ப வந்துவிட்டது."

இந்தப் பதில் அன்வரின் சிந்தனையைக் கிளறி விட்டது: இவ்வனிதை யார்? பழைய நீமாவின் அழகிய முகம் அன்வரின் மனக்கண் முன்னே தோன்றி நின்றது. அந்தச் சிறிய முகத்துக்கும், இந்த வனிதைக்கும் ஏதோ தொடர்பு இருப்பதாகக் கண்டான். இதை அவளிடம் எப்படிக் கேட்பது? அவள் கரத்திலுள்ள கடிதத்தில் ஏதோ இரகசியம் இருக்கலாமென்று அன்வருக்குத் தோன்றிற்று. அதைக் கேட்டால் அவள் கொடுப்பாளா? அல்லது மறுப்பாளா? என்று சிந்திக்கும் போது வெளிவாசலில் சிலர் இரைந்து பேசும் குரலைக் கேட்டுக் கவனம் செலுத்தினான். அவர்கள் என்ன பேசினார்களென்பது விளக்க மாக வில்லை. ஆனால் பொலீசார்கள் வந்திருப்பதாக உணர்ந்தான். சிறிது நேரத்திலே அன்வரின் அறையில் சில பொலீசார்கள் நுழைவதைக் கண்டு திகைத்தான். நீமா பதில் கூறினாள்; அதில் அதிகார தோரணையும் கெம்பீரமும் தொனித்தது: "தம்பதிகளிருக்கும் அறையில் முன்னெச்சரிக்கை யில்லாமல் நுழைவதால் உங்கள் மீது எதிர் நடவடிக்கை எடுக்க ஏற்படும்; உடனே வெளியில் செல்லுங்கள்" என்றாள் நீமா.

அன்வருக்கு இது பேராச்சரியமாக யிருந்தது. தம்பதிகளென்றால் யார்? இங்கே இருப்பவள் என் மனைவியா? இந்தப் பேரழகியா என் மனைவி? என்று சிந்தித்த வண்ணம் நீமாவின் கரத்திலிருந்த கடிதத்தை



பிடுங்கிக் கொண்டான். அதற்காக நீமா பதஷ்ட மடையவில்லை; புன்னகைதான் புரிந்தாள். அதைக் கண்டு மகிழ்ந்த அன்வர் அக்கடிதத்தை வாசித்தான் :—

"உங்களின் மனைவியைத் தேடி ஊர் ஊராகத் திரிகிறீர்கள் ! உங்களின் மனைவி உங்கள் முன்னே தோன்றி, 'நான்தான் உங்கள் மனைவி' என்று சொன்னால் ஏற்றுக்கொள்வீர்களா? அதற்காகவே அவள் பயந்துகொண்டிருக்கிறாள். அவளுடைய மனமும் உடலும் உங்களுக்காகத் துடித்துக் கொண்டிருக்கிறது. அவள் எங்கே இருக்கிறாளென்று தெரிந்து கொள்ள அதிகச் சிரமம் தேவையில்லை. நீங்களிருக்கும் வீட்டிலேயே அவளும் இருக்கிறாள்.

இப்படிக்கு
உண்மையறிந்த ஒரு ஜீவன்."

பொலீசார்கள் முன்னே, தான் என்ன செய்கிறான் என்பதையே உணராமல் நீமாவின் கரத்தைப் பிடித்துக் கொண்டான் அன்வர். "உண்மையைச் சொல்: நீ யார்? நீ என் நீமாவா ? என் அழகிய நீமாவா? சொல்ல மாட்டாயா? எனது ஹிருதய தேவி நீதானா ? நீமா ! நீமா!! சொல்லு. நீ எனது கிருகலட்சுமியா? தர்ம தேவதையா? கற்பின் அலங்காரியா? என் மனைவிளக்கு நீதானா? உண்மையைச் சொல், ஏன் இவ்வளவு தாமதம்? நான் உனக்குச் செய்த அநீதத்தை நினைத்து வருந்துகிறாயா ? அவைகளை மன்னித்து மறந்து விட மாட்டாயா? எனது மனத்தில் உலாவும் மேதை அல்லவா நீ; எனது அமிர்த வருஷினி அல்லவா நீ ! சொல்ல மாட்டாயா? நீமா! நீமா!! நீமா!!!"

இளங்காதலர் இருவர்கள் கண்களிலும் தாரை தாரையாகக் கண்ணீர் வழிந்தோடிக் கொண்டிருந்தது. எத்தனையோ ஆண்டுகளாகத் தேங்கிக்கிடந்த அக்கண்ணீர் இன்று பெருக்கெடுத்து அருவியாகஓடிற்று. இருவருடைய உள்ளமும் ஒன்றுபட்டு ஐக்கிய மடைந்தன. உள்ளே நுழைந்த பொலீசார்கள் அறைக்கு வெளியே நின்று கொண்டார்கள். அவர்களுக்கு இதில் நிரம்ப சிரத்தை இருந்த போதிலும், தங்கள் முயற்சியில் படுதோல்வி ஏற்படலாமென்ற சந்தேகம் அவர்களுக்கு இருந்தது. அதையே, அங்கே அவர்கள் எதிர்பார்த்தார்கள்.

அன்வர் மலாயாவுக்குச் சென்ற போது " இமிக்ரேஷன் பத்திரம் எடுத்துச் செல்ல நேர்ந்தது. அதில் அன்வருடைய படம் ஒட்டப்பட்டிருந்ததால், அந்தப் பத்திரத்தை எடுத்துப் பொலீசாரிடம் காட்டித் தான் யாரென்பதை விளக்கினான். பொலீசார்களுக்குத் நீமாவின் விஷயங்களனைத்தும் தெரியும். ஆகவே அன்வர் நீமாவின் கணவனே என்று விளக்கமான பின் பொலீசார்கள் தங்களின் முயற்சியில் தோல்வியடைந்ததைத் தெரிந்து சதாசிவத்தின் வீட்டை விட்டு வெளியேறினார்கள்.

இனி அதிகமாக வளர்த்துவானேன்! அன்வரும் நீமாவும் அடைந்த மகிழ்ச்சியை அவர்களோடவே விட்டு விடுவோம். அவர்கள் சுமார் ஆறு மாதங்கள் ஆனந்தமாக இந்தியாவிலிருந்தார்கள். அதற்குப் பின் மலாயாவுக்குச் சென்று தங்களின் இன்ப வாழ்வை இனிது நடாத்திக்கொண்டிருக்கிறார்கள் : அவ்வளவுதான்! (முற்றும்.)

உடம்பொடுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு.

# தாவரவர்க்க வாழ்க்கை Vegetation.

சிறுவர்களே! மனிதர்களின் வாழ்க்கை அதிக ஆச்சரியகரமானது என்பதை நாட்கள் செல்லச் செல்ல நீங்கள் அறிந்துகொள்வீர்கள். இதே முறையில் தாவர வர்க்கங்களும் மனித வர்க்கத்தைப் போல் அனேகபல ஆச்சரியங்களைத் தம்முள் அடக்கிக் கொண்டிருக்கின்றன. ஒரு சமயம், மரம் செடி கொடிகளுக்கு உயிரில்லையென மக்கள் மதித்து வந்தனர். இவ்வெண்ணத்திற்கொப்ப தாவர வர்க்க உலகமே மனிதர்களின் கவனத்துக் கப்பால் ஒதுங்கி யிருந்ததென்னலாம். ஆனால் விஞ்ஞான (Science) ஆராய்ச்சி மேடை அதிகம் விரிந்து செல்லச் செல்ல மரம் செடி கொடிகளும் மனிதர்களைப்போல் அவற்றிற்குத் தக்க முறையில் வாழ்க்கை நடத்தி வருகின்றன என்பது வெளியாயிற்று. மனிதர்கள் தங்கள் உயிர் வாழ்க்கைக்கு உணவு ஆகாயம் அதற்குவேண்டிய சாதனங்கள் எப்படி அத்தியாவசியமெனக் கருதுகின்றனரோ அஃதேபோல் தாவர வர்க்கங்களும் தங்கள் வாழ்க்கைக்கு முக்கிய பொருட்களை வேண்டியே நிற்கின்றன.

மனிதர்களாகிய நாம் பகற்காலமெல்லாம் வேலை செய்து அலுப்புற்றதன் பின், இரவு வந்ததும் ஓய்வு எடுத்துக் கொள்ளுகின்றோம். இவ் ஓய்வுக்குப் பிறகு மறுதினம் மனிதன் பிரயாசைப் பட்டுழைக்கத் தகுதியும் லாயக்கும் உள்ளவனாகச் சமைகிறான். இராக் காலங்களில் ஓய்வு கொள்ளாதவன் மறுநாள் வியாதியஸ்தனை போல் தடுமாற்ற முற்றுக் குடியனைப்போல் கலக்கமுற்றுத் தென்படுவான். இதேமுறையில் மரம் செடி கொடி வகைகளும் சிறிது நேரம் ஓய்வு எடுத்துக் கொள்ளவே பிரியப்படுகின்றன. தாவர வர்க்கங்களுக்குக் கரியமில வாயு (Carbondioxide) உணவாயிருக்கிறது. இதில் கரியை (Carbon) மட்டும் தமக்கு வேண்டிய வேலைகளுக்கு உபயோகப்படுத்திக்கொள்ளுகின்றன. ஏனெனின், அவற்றின் வாழ்க்கைக்கு இதுவே முக்கிய பொருளா யிருக்கின்றது. எனினும் பிராண வாயுவை (Oxygen) அது வெளிப்படுத்தி விடுகிறது. பிராண வாயு (Oxygen) என்பது மனித வாழ்க்கைக்கு முக்கிய பொருளாயிருக்கிறது. மனித வர்க்கமும், மிருக வர்க்கமும் சுவாசம் இழுக்கும்பொழுது பிராண வாயுவை சுவாசத்துடன் இழுத்துக்கொள்ளுகின்றன; கரியமில வாயுவை வெளிப்படுத்தி விடுகின்றன. மனித வர்க்கமும், மிருக வர்க்கமும் வெளிப்படுத்தக் கூடிய கரியை, மரம் செடி கொடிகள் தங்களுக்காக எடுத்துக் கொள்ளுகின்றன. தாவர வர்க்கங்கள் வெளிப்படுத்தும் பிராண வாயுவை மனித வர்க்கம் எடுத்துக் கொள்ளுகின்றது. எனவே மனிதனும் மிருகமும், மரம் செடி கொடிகளும் உயிருடன் செழிப்பாய் வாழ்ந்து வர வேண்டுமாயின் ஒன்றுக்கு மற்றொன்று மகா முக்கியமாகவே வேண்டற்பாலதா யிருக்கின்றது. மனிதர்களும் மிருக வர்க்கமும் இல்லையெனின் மரம் செடி கொடிகள் இருப்பது முடியாது; இதேமுறையில் மரம் செடி கொடிகள் இல்லையாயின் மனிதர்களும் மிருகங்களும் உயிருடன் வாழ்க்கையை நடத்த முடியாது என்று நாம் நன்கு தெரிந்து கொள்ளுகின்றோம்.



மேலும், சூரிய உஷ்ணம் மனித வாழ்க்கைக்கும் அஃது நிலைத்திருப்பதற்கும் அத்தியாவசியமா யிருப்பதே போல், மரம் செடி கொடிகளுக்கும் மிக மிகத் தேவைப்படுவதாகவே இருக்கின்றது. சூரியன் உலகத்தில் தன்னுடைய பிரகாசத்தை வீசிக் கொண்டிருக்கும் போது தான் மரம் செடி கொடிகளெல்லாம் அதனின்றும் கரியமில வாயுவை கிரகித்துக் கொண்டே யிருக்கின்றன. இச்சமயம் அவைகள் பிராண வாயுவை வெளிப்படுத்த முடியாம லிருக்கின்றன. ஆனால் சூரியன் மறைந்ததும் மரம் செடி கொடிகளும் அவை செய்து கொண்டிருந்த வேலைகளினிமித்தம் அதிகம் களைப்புற்று நிற்கின்றன; பின்னர் அயர்ந்து விடுகின்றன. அவை தமது அயற்சியின்போது பிராண வாயுவை (Oxygen) வெளிப்படுத்திக்கொண்டே யிருக்கின்றன.

பிள்ளைகளே! புஷ்பத்தின் எடை பகல்வேளையில் அதிகமா யிருக்கிறதென்றும், அதே அப்புஷ்பத்தின் எடை இரவில் குறைந்து போகிறதென்றும் நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம்; அல்லது பார்த்துமிருக்கலாம். இதன் காரணமென்ன தெரியுமா? பகல் வேளையில் புஷ்பத்துக்குள் வாயு (gas) நுழைந்து கொண்டிருக்கிறது. ஆனால் இரா வேளையில் அதைப் புஷ்பம் வெளிப்படுத்துகின்றது என்பதை நீங்கள் அறிந்துகொள்ள வேண்டும்.

மனிதர்கள் பற்பல விதமாய்க் காணப்படுகின்றனர். இஃதேபோல் தாவர வர்க்கமும் அனேகவித வித்தியாசங்களுடன் தென்படுகின்றன. சில புஷ்பங்கள் சூரிய உஷ்ணத்தைச் சகிக்க முடியாம லிருக்கின்றன. இக்காரணமாய்க் குறிப்பிட்ட ஒரு சில புஷ்ப இதழ்களுக்கு வெளியே உறுதியான மூடியேபோன்ற இதழ்கள் நிற்பதை நீங்கள் காணலாம். அதன் நிழலில் அம்மெல்லிய புஷ்பங்கள் மறைந்து கொள்ளுகின்றன. சூரிய வெளிச்சமும் உஷ்ணமும் இருக்கும்வரை அப்புஷ்பங்கள் வெளி வருவதே யில்லை.

பறவை யினங்கள் பகற்காலம் பூராவும் தனக்காகவும், தன்னுடைய குஞ்சுகளுக்காகவும் இரை தேடும் வேலையில் சுற்றியலைந்து வருகின்றன. இரவு வந்தவுடன் அமைதியுடன் அவை நித்திரை செய்கின்றன. ஆனால் பறவை யினங்களிலேயே ஆந்தை, வௌவால் போன்ற ஒரு சில இதற்கு மாற்றமாய்ச் சூரியன் வெளிப்பட்டு மறையுமட்டும் பகல் பூராவிலும் வெளி வருவதே யில்லை. ஆனால் அப் பகற் காலங்களிலெல்லாம் அயர்ந்து நித்திரை செய்து கொண்டே யிருக்கின்றன. சூரியன் மறைந்து இராக்காலம் ஆரம்பித்ததும் இப்பறவை யினங்கள் தமது கூடுகளினின்றும் வெளிக்கிளம்பித் தமக்கு வேண்டிய ஆகாரத்தைத் தேடத் தலைப்படுகின்றன. இதே முறையில்தாம்பல புஷ்பங்கள் இருக்கின்றன. பொதுவாய்ப் புஷ்பங்களெல்லாம் பகலில் விழிக்கின்றன, இரவில்தான் அயர்ச்சியுறுகின்றன. ஆனால் ஒரு சில புஷ்பங்கள் நாம் மேலே எடுத்துக்காட்டிய பறவையினம் போல் பகற்காலங்களில் அயர்ச்சியுடன் நித்திரை செய்வனவாகவும், இரவில் விழிப்புடனும் காணப்படுகின்றன. இவ் விஷயங்கள் எப்பொழுதும் உங்கள் ஞாபகத்தி லிருக்கவேண்டும்.

---

# விவாகமா? உத்தியோகமா?

## Marriage or Employment

**(BY ZUBEIDA BEGUM)**

சகோதரிகளே! தற்சமயம் உலகத்தில் பெண்மணிகள் ஏதேனும் உத்தியோகம் வகித்து ஊதியம் பெறவேண்டுமென வற்புறுத்தப்படுகிறது. இப்படியே தற்கால வாலிபர்கள் பலர் இதே முறையில் காணப்படும் ஊதியம்பெறும் படிப்புள்ள பெண்களே தங்களுக்குத் தேவையென தேடிக் கொண்டு அலைகின்றனர். எனவே இந்தியாவிலுள்ள பெண்மணிகள் இத்தகைய துறையில் பிரயோஜனத்தை யடைவது இலாபகரமானதா, இல்லையா என்னும் பிரச்னையும் சந்தேகமும் தானுகவே நமது மனதில் உதிக்கின்றது. அதைக் கவனிப்போம்.

இந்தியாவிலுள்ள பெண்மணிகளில் உத்தியோகம் வகிக்கும் பலர் ஐரோப்பிய மாதர்களைக் கண்டு அவர்களுடைய நாகரிக நடையுடை பாவனைகளையே முன்பின் யோசனை ஒன்றுமில்லாமல் கைக்கொள்ளத் தலைப்பட்டு விடுகின்றனர். இதுமட்டுமா? ஐரோப்பாவிலும், அமெரிக்காவிலும் உள்ள பெண் மக்கள் தங்கள் விவாக வாழ்க்கையை விட உத்தியோகத்தையே மேலானதென எண்ணி அதிக ஆனந்தமாகவும் உல்லாசமாகவும் இருக்கின்றனர் என்பதையும் இவர்கள் கேள்வி யுறுகின்றனர். ஆகவே தாமும் அதிக ஆனந்தத்துடனிருக்க வேண்டுமாயின் படித்ததற்குப்பின் விவாகமென்பது தேவையில்லை; உத்தியோக வாழ்க்கையே விரும்பத்தக்கதெனத் தீர்மானித்து விடுகின்றனர். எனவே ஐரோப்பிய மாதர்கள் தங்கள் எண்ணப்படி உத்தியோக வாழ்க்கையைப் பெரிதென மதித்து ஏதேனும் நற்பிரயோஜனத்தை யடைகின்ருர்களா என்பதை நீங்களெல்லோரும் கவனித்தல் வேண்டும்.

இதற்கு அமெரிக்கருள் பிரதம நடிகையான மேரி லைன் ரீட்ரிக் எழுதியிருக்கும் ஒரு விஷயத்தைக் கவனித்துப் பார்ப்பீர்களாக: 'அமெரிக்காவில் நடிகையாய்ச் சமைவது, இந்தியாவில் மகா கேவலமாய் நினைக்கப்படுவதே போல் இங்கு மதிக்கப்படுவதில்லை,' என்று கூறிவிட்டு இவர் மேலும் கூறுகிருர். 'யான் சினிமாவில் நடிக்கத் தலைப்பட்டதன்பின் இச் சம்பாத்தியத்தின் காரணமாய் லட்சக் கணக்கான பொருள்களுக்கு யான் சீமாட்டியாகவே யிருக்கிறேன். ஆனுல் என்னுடைய சகோதரிகளுக்கு என்னுடைய ஆழ்ந்த அபிப்பிராயமொன்றைத் தெரியப்படுத்தியும் விடுகிறேன். நான் தற்சமயம் வகித்து வரும் நடிகையென்ற பெயரால் நட்சத்திரத்தைப்போல் உலகெங்கும் பிரகாசிக்கவே செய்கின்றேனுயினும் இத்தகைய வாழ்க்கையில் என் சகோதரிகளாகிய பெண்பாலார்கள் ஈடுபடுவதைக் காட்டிலும் அவர்கள் மணவாழ்க்கை முறையில் தங்கள் காலத்தைக் கழிப்பதே மகா பெரிய சந்தோஷமும் சௌகரியமுமான வழியா யிருக்குமென்பதை மறைக்காமல் கூறுகின்றேன். நான் வகிக்கும் உத்தியோகத்தில் கௌரவமாகவே நடத்தப்படுகிறேன்.

போதுமென்ற பொருளையும் சம்பாதித்துக் கொள்கிறேன். ஆயினும் இல் வாழ்க்கையின் தோற்றமும் எண்ணமும் என் மனத்திலுதிக்குங்கால் யான் மிகவும் மோசம் போய் விட்டேனென்றே அயர்ந்துவிடவேண்டியவளாயிருக்கின்றேன். பத்தாண்டுகளாய் யான் இவ்வுத்தியோகத்திலிருக்கிறேனாயினும் மனநிம்மதி யென்பதே எனக்கில்லை. இதுவுமல்லாமல் கடந்துபோன பல ஆண்டுகளைத் திருப்பிப் பின்னே தள்ளிவிட்டு யான் முன்னே போய் விடலாமென்பதும் முடியாதன்றோ. இன்னும் என்னுடைய வாழ்க்கையைத் தூய இல்வாழ்க்கையாய் மாற்றிவிடுவதென்பதும் முடியாமலேயே இருக்கிறது. ஆதியிலேயே மணவாழ்க்கையை மேலென யான் நினைத்திருப்பின் நடிகை யென்ற பெயரையே யான் எடுத்திருக்கமாட்டேன். ஆனால் தற்சமயமுள்ள அனுபவம் அப்பொழுதே எனக்கிருப்பின் யான் நடிகையாய் அமைய சம்மதிக்கவே மாட்டேன்?'

சகோதரிகளே, மேற்கண்ட நடிகையான மேரி லைன் ரிட்ரிக் கூறியுள்ள வார்த்தைகளை நன்கு ஆலோசித்துப் பார்க்க வேண்டும். தற்சமய உலக சோதரிகள் சிலர், 'பெண்கள் படித்து விட்டதன் பின் வீட்டில் அமர்ந்துகொண்டே நேரத்தை எங்ஙனம் கழித்தல் சாலும்? அவர்களுக்கு ஏதேனும் வேலை ஒன்று வேண்டாமா?' என்று கேட்கின்றனர். படித்தவர்கள் உத்தியோகம் பார்க்கவேண்டும், அதன் மூலமேதான் சம்பாதிக்கவேண்டுமென்பதில்லை. மேலும் பெண்மணிகளுக்கு இல்லத்தில் வேலை யொன்று மில்லை என்று கூறுவதும் ஏற்றுக்கொள்ளத் தக்க விஷயமல்ல. என்னெனின், ஒரு சில இல்லங்களில் என் சகோதரிகள், வேலை அதிகமாயிருக்கிறது, நேரம் போதவில்லையே என்று கூறுவதையும் கூட யான் கேட்டிருக்கின்றேன். ஆண்பிள்ளைகள் வெளியிற் செல்வது உலக இயற்கையாயிருப்பது போல் பெண்பாலர்களான நமக்கு இல்லமே இயற்கை யுலகமாயிருக்கின்றது. இதில் பெண்மணிகள் செய்ய வேண்டிய வேலைகள் எவ்வளவோ இருக்கின்றன. தன் இல்ல-உலக விஷயத்தை முடித்ததற்குப்பின் அவகாசம் கிடைப்பின் என் அரிய சகோதரிகள் காலத்தை வீண் போக்காமல் தனக்குத் தெரிந்த ஏதேனுமொரு கைத்தொழிலைச் செய்யட்டும். இதில் சம்பாத்யம் உண்டு, கௌரவமும் உண்டு. வெளியிற் போக வேண்டிய சிரமம், சம்பாதிக்க வேண்டிய வேலையை உங்கள் வாழ்க்கைத் துணைவர்களாம் கணவர்கள் பால் விட்டு விட வேண்டும். கணவன்மார்கள் வெளியிற் சென்று சம்பாதிக்கிறார்களென்றால், பெண்பாலர்களான நாம் இல்லத்திலிருந்தே சந்தோஷத்துடன் அதிகம் சம்பாதிக்கலாம். பெண்மணிகளாகிய நம்மைக் கைக்கொண்ட புருடர்களுக்கு நாம் தலைச்சுமையாய்ச் சமைய வேண்டுமென்பதில்லை. இல்லத்திலிருந்த வண்ணமே அனேக பல வகைகளில் கைத்தொழில்கள் மூலம் நாம் சம்பாதிக்கலாம். நேரம் வீண் போகிறதென்பது எங்ஙனம்? காலம் கிட்டவில்லையே என்ற கவலையே அதிகம் நம்மை வாட்டும் என்பதை உங்களுக்கு நினைவு கூறுகிறேன்.

இதற்கு விரோதமாய்ப் பெண்மணிகளாகிய நாமும் ஆண்பிள்ளை



களை போல் உத்தியோகம் வகிக்கத் தலைப்பட்டு விடுவோமாயின் இல் வாழ்க்கையில் இன்ப மில்லாமலே போய் விடுமென்பது ஞாபகமிருக்க வேண்டும். எப்படியெனில், ஆடவரின் இயற்கை விருப்பமாவது: தனது இல்லாள் தன்னை அதிகம் கவனிக்கவேண்டும். பிள்ளையைப் போல் மதித்துப் பராமரிக்கவேண்டும். தனது சுகத்துக்கான சர்வ காரியங்களையும் செய்யவேண்டும். தான் எண்ணும் எண்ணங்களுக்கு உதவியாயிருக்க வேண்டும். தனக்கேற்படும் மனக்கவலைகளையும் சஞ்சலங்களையும் நிவாரணம் பண்ணுவதில் உதவியாயிருக்கவேண்டும் என்பன போன்றவைகளே. விஷயம் இங்ஙனமிருக்க உத்தியோகம் வகிக்கும் பெண்மணியானவள் வீட்டுக்குத் திரும்பி வந்ததும் தன் கணவனிடம் தன் காரியாலய காரிய அம்சங்களைப் பற்றியே பேசிக்கொண்டிருந்தால் கணவன் மனம் யாது பாடு படு மென்பதை யான் விவரிக்கத் தேவையில்லை. இப்படியே கணவன் படுக்கையை விட்டெழுந்ததும் தன் மனைவியானவள் காரியாலயத்துக்குப் போகத் தயாராயிருக்கிறாள் அல்லது அதற்கான ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருக்கிறாள் ஆனால் தனக்கு வேண்டிய ஆகார அம்சங்களையெல்லாம் வேலையாட்களிடம் ஒப்படைத்திருக்கிறாள் என்று தெரிந்ததும் அவன் ஹிருதயம் எங்ஙனம் கொதிக்கு மென்பதையும் யான் எடுத்துக் காட்டுவது வீண் விஷயமே யாகும். ஆகவே எனது சகோதரிகள் தாங்கள் நன்கு படிக்கட்டும்; இதில் குற்றமேயில்லை. படித்ததன்பின் உத்தியோகம் வகிக்கவேண்டும், அதனால் தான் நாம் சம்பாதிக்க வேண்டும், நமக்குக் கிடைக்கும் சந்தோஷமும் சௌகரியமும் உத்தியோகத்தினால் தான் ஏற்படும் என்ற எண்ணத்தை மட்டும் தங்கள் மனங்களிலிருந்து கலைத்துவிட வேண்டும். கல்வி பயின்ற என் சகோதரிகள் குடும்ப வாழ்க்கையே பெரிதென்றும் கௌரவமானதென்றும் கருதல் வேண்டும். தங்கள் படிப்புக்குத் தக்க முறையில் கிருஹத்திலேயே ஏதாவதொரு கைத்தொழிலைத் தாமே செய்யலாம். தனக்குதவியாய்ப் பல சகோதரிகளைச் சேர்த்தும் கொள்ளலாம். வீடு வாசல்களைத் தன் புத்திக்குத் தக்க முறையில் சுத்தமாகவும் ஒழுங்காகவும் அழகு பெறவும் வைத்துக்கொள்ளலாம். சுருங்கக்கூறின் பெண்மணிகளான எனது சகோதரிகள் தங்கள் இல்லங்களிலிருந்தே நற்கீர்த்தியையும் நற் சுகத்தையும் நல்ல சந்தோஷத்தையும் பெறலாமென்பதையே பன்முறையும் எச்சரிக்கின்றேன்.

---

## சகோதரர்களே ! கவனியுங்கள் ! !

தமிழ் முஸ்லிம்களுக்குப் போதிய தமிழ்ப் பத்திரிகைகள் இல்லாத இச்சமயத்தில், " நூருல் இஸ்லாம் " மேலும் மேலும் சிறந்த விதமாய் விஷயங்களையும், வியாசங்களையும் வெளியிட்டு வருகின்றது. எனினும் இஃது இன்னும் நல்லவிதமாய் நடைபெற முஸ்லிம் சகோதரர்கள் ஆளுக்கொரு சந்தாவையேனும் அன்புடன் சேர்த்தனுப்புதல் வேண்டுமென்பதை அதிக வணக்கமாய்த் தெரிவித்துக்கொள்ளுகின்றேன். எனது சுற்றுப்பிரயாணத்தில் தாங்கள் எல்லீரும் எனக்குப் பேருக்கமளிக்க முன் வருவீர்களென நம்புகின்றேன்.

காதிமுல் இஸ்லாம்—ஹாபிஸ் பாகவீ
(நூ. இ. ஆசிரியன்)

# 5000-ஆண்டுக் குறிப்புக்கள்

## 5000—YEARS' DIARY

(முன் தொடர்)

கி. பி 1558-ல் பிரான்ஸ் தேசத்தில் ஆராய்ச்சிக் கழகம் நிறுவப்பட்டது.

„ 1571-ல் துருக்கி உதுமானியர்களை ஆஸ்ட்ரியா வாசிகள் வென்றனர்.

„ 1572-ல் பெர்டில் மவுஸ் உடைய பரிசுத்த பலி ஆயிற்று.

„ 1572-ல் 4-ஆம் ஹென்ரி பிரான்ஸின் அதிபதியாக்கப்பட்டார்.

„ 1578-ல் ஸ்காட்லந்து ராணி ராஸ்கிலியை வெட்டினாள்.

„ 1603-ல் ஸ்காட்லந்து இங்கிலாந்துடன் சேர்ந்தது.

„ 1610-ல் 4வது ஹென்ரி கொல்லப்பட்டார்.

„ 1649-ல் சார்லஸ் 1-உடைய தலை துண்டிக்கப்பட்டது.

„ 1660-ல் ஸ்டுவர்ட்ஸ் வம்சத்தார் இங்கிலாந்தில் அரசராயினர்.

„ 1683-ல் கமாண்டர் ஜேம்ஸ் ஸ்பீகி உதுமானியர்களை வென்றார்.

„ 1688-ல் இங்கிலாந்தில் மீண்டும் புரட்சி உண்டாயிற்று

„ 1689-ல் கிரேட் பீடர்ஸ் ரஷ்யாவின் சக்ராதிபதியானார்.

„ 1699-ல் வட அமெரிக்காவில் லூஸியன் என்னும் நகரம் நிர்மாணிக்கப்பட்டது.

„ 1702-ல் பிரான்ஸுடைய அபார சைன்யங்கள் பைபோனில் நாசமாயிற்று.

„ 1709-ல் இங்கிலாந்தும் ஸ்காட்லாந்தும் ஐக்யமாயிற்று.

கி. பி. 1714-ல் கோல்ட்பெஸ் வம்சத்தார் இங்கிலாந்தின் அதிபதியாயினர்.

„ 1715-ல் 14-வது லூயி மரணமடைந்தார்.

„ 1718-ல் 7-வது சார்லஸ் கொல்லப்பட்டார்.

„ 1725-ல் ரஷ்யாவின் பீடர்ஸ் இறந்துவிட்டார்.

„ 1740-ல் பிரடரிக் ரஷ்யாவின் சக்ராதிபதியானார்.

„ 1742-ல் வார்ஸாவின் உடன்படிக்கை முடிவுற்றது.

„ 1757-ல் ரூஸ்பிக் லிஸான் யுத்தங்கள் நடைபெற்றன.

„ 1758-ல் ரோஸங்தோல் யுத்தம் நடைபெற்றது.

„ 1759-ல் மெயின்சன் யுத்தம் நடைபெற்றது

„ 1759-ல் கோபிக் யுத்தம் நடைபெற்றது.

„ 1763-ல் யுத்தங்களெல்லாம் முடிவுற்றன.

„ 1763-ல் கனடா, இங்கிலாந்தின் குடியேற்றநாடாயிற்று

„ 1768-ல் துருக்கியருக்கும் ரஷ்யாவுக்கு மிடையே யுத்த ஆரம்பம்.

„ 1769-ல் நெப்போலியன் போனபார்டி ஜனனமானார்

„ 1770-ல் ஐக்ய ஐரோப்பா வாஷிங்டனுக்குப் பலியாயிற்று.

„ 1773-ல் 16வது லூயி பிரான்ஸின் சிம்மாசனமேறினார்.

„ 1775-ல் அமெரிக்காவில் சுயேச்சைக்காகப் புரட்சி உண்டாயிற்று.

" 1775-ல் பண்கர்ஹில் யுத்தம் நடைபெற்றது.

" 1776-ல் லோப் எலிடா-விடீர்ன்டன் யுத்தம் நடைபெற்றது.

" 1777-ல் வென்யென் பிரான்டோன் ஜெர்மன்தோம் யுத்தங்கள் நடைபெற்றன.

" 1778-ல் அமெரிக்கா-பிரான்ஸுக்குமிடையே உடன்படிக்கை யுண்டாயிற்று.

" 1778-ல் ஐக்கிய ஐரோப்பாவில் மொட்டொமண் யுத்தம் நடைபெற்றது.

" 1779-ல் ஐக்கிய ஐரோப்பாவுக்கும் ஸ்பெயினுக்குமிடையே ஒற்றுமை ஏற்பட்டது.

" 1780-ல் கார்லிட்டன்-கிராம்டன் யுத்தம் நடைபெற்றது

" 1782-ல்சுயேச்சைக்குரியஷெ யுத்தம் முடிவுற்றது.

" 1783-ல் சட்டப்பிரகாரம் அமெரிக்கா ஆங்கிலேயரைத் தனித்து விட்டது.

" 1786-ல் ஐக்கிய ஐரோப்பாவில் புரட்சி உண்டாயிற்று. மீண்டும் இதே ஆண்டில் பிரடர் சக்ரவர்த்தியும் காலமாயினர்.

" 1787-ல் பிரான்ஸ் தேசத்தின் தலைவர்களும் தனவந்தர்களும் ஒரு கூட்டம் கூடி பிரான்ஸ் தன்னைத் தானே தற்காத்துக் கொள்ளவும் தன் தேசத்தை அரசாட்சி செய்யவும் அம்மகா நாட்டில் வழிகள் கண்டுபிடித்தனர்.

" 1788-ல் கஸ்டீபன் ரூஸ்டன் யுத்தம் தொடங்கினர்.

" 1789-ல் ஐக்கிய ஐரோப்பாவில் தலைவர்கள் பொதுக் கூட்டம் கூட்டினர்

" 1789-ல் பிரான்ஸில் புரட்சி இயக்கம் ஆரம்பம்.

" 1789-ல் ஐக்கிய ஐரோப்பாவில் அரசாங்கமெல்லாம் ஒன்று கூடி பொது அரசியல் திட்டமொன்று வகுத்து அதை எல்லாரும் ஏற்றுக்கொண்டனர்.

" 1789-ல் ஐக்கிய நாட்டின் முதல் தலைவர் ஜார்ஜ் வாஷிங்டனாய்ச்சமைந்தார். அவர்தான் முதல் சேனாதிபதியாய் விளங்கா நின்றார்.

" பிரான்ஸுடைய பெட்டல் சிறைச்சாலையின் அஸ்திவாரங்களெல்லாம் தகர்க்கப்பட்டுவிட்டன.

" நார்வே வாசிகள் தாங்கள் சுயேச்சையாளர்களெனப் பிரகடனப்படுத்தினர்.

" 1791-ல் கத்திப் மேராபு மரணமடைந்தார்.

" பிரான்ஸில் சட்டசபை ஏற்பட்டது.

" 1791-ல் கனடாவுக்கு அரசியல் சட்டங்கள் ஒப்படைக்கப்பட்டன.

" 1792-ல் ரஹிமாப்ஸ் யுத்தம் நடைபெற்றது.

" 1792-ல் ஐக்கிய நாட்டில் கூட்டங்கள் நடைபெற்றன.

" 1793-ல் 15வது லூயி சிறைச்சேதம் செய்யப்பட்டார்.

" 1793-ல் பஞ்சினால் உயரிய ஆடை தயார் செய்ய ஆரம்பிக்கப்பட்டது.

" 1793-ல் போலந்து ரஷ்யாவிலிருந்து தனியாய்ப்போய் விட்டது.

" 1794-ல் டோன்டோ கனடாவின் தலைநகரெனத் தீர்மானிக்கப்பட்டது.



கி. பி. நெப்போலியன் போனபார்ட்டி பெரிய சைன்யத்துடன் இதாலி மீது படையெடுத்தார்.

" 1796-ல் லோடி அர்க்கோலா ரம்போலி முதலிய யுத்தங்கள் நடைபெற்றன.

" 1797-ல் காம்போ போனியோ உடன்படிக்கை உண்டானது.

" 1797-ல் ஜான் எடிசன் ஐக்ய நாட்டின் தலைவராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

" 1798-ல் எஹ்ரான் யுத்தம் நடைபெற்றது.

" 1799-ல் பிரான்ஸ் கவர்ன்மெண்டார் பாபிகிர் என்னுமிடத்தில் வெற்றிகொண்டனர்.

" 1800-ல் நெப்போலியன் போனபார்ட்டி ஆல்ப்ஸ் மலைகளைக் கடந்தார்.

" 1800-ல் நெப்போலியன் போனபார்ட்டி ஜெர்மானியரை மாரிஸ்கோ ஹோஹோசில்டனில் தோற்கடித்தார்.

" 1801-ல் தாமஸ் ஜாபர்ஸன் ஐக்ய நாட்டின் தலைவரானார்.

" 1801-ல் அயர்லாந்து இங்கிலாந்துடன் சேர்க்கப்பட்டது.

கி. பி. 1802-ல் நெப்போலியன் அந்நிய தேசங்களில் ஸ்தானிக காரியாலயங்களை ஏற்படுத்தினார்.

" 1802-ல் இங்கிலாந்துக்கும் பிரான்ஸுக்குமிடையே மீண்டும் யுத்தம் ஆரம்பம்.

" 1803-ல் ஐக்ய நாடு பிரான்ஸிடம் நோரையான் கிரயம் பெற்றுக்கொண்டது.

" 1803-ல் ஸ்விட்ஜர்லாந்து சுயேச்சை நாடாய்விட்டது.

" 1803-ல் காலோவுக்குக் கனடாவில் சுயேச்சை கிடைத்தது.

" 1804-ல் நெப்போலியன் I பிரான்ஸின் சக்ராதிபதியாய் ஆக்கப்பட்டார்.

" 1805-ல் கமாண்டர் நெல்ஸன் மரணமானார்.



## பத்திரிகையின் சக்தி

விளம்பரத்துக்கேற்றபடி சரக்கு எப்படி நன்கு விற்பனையாகிறதோ, அதேமாதிரிதான் பத்திரிகையை ஆதரிப்பதற்கேற்றவாறு சமூகங்கள் நன்கு முன்னேறுகின்றன. ஐயர்லாந்தில் டிவேலரா கட்சி வலுத்து விரைவில் சுதந்தரம் பெற்றதற்குக் காரணம், அங்குள்ள பத்திரிகைகளை அவர்கள் ஒற்றுமையாய் ஆதரித்ததே. எனவே முஸ்லிம் சோதரர்கள் இன்னுமா பத்திரிகையின் சக்தியை உணராமலிருக்கவேண்டும்? உணர்வீர்களாயின், உடனே ஒவ்வொருவரும் "நூருல் இஸ்லாத்"துக்கொரு சந்தாவைச் சேர்த்துக் கொடுங்கள்; "நூருல் இஸ்லாத்"தை எல்லோரும் படிக்கும்படியும் செய்யுங்கள்.

காதிமுல் இஸ்லாம்—ஹாபிஸ் பாகவீ.

ரிஜிஸ்டர்ட் நெ. M. 3692

## மதன சஞ்சீவி லேகியம்

இப்புகழ் வாய்ந்த லேகியத்தை உபயோகித்து நிகரில்லாத பலத்தையும் அபார வீரிய விருத்தியையும், இணையற்ற இல்லற இன்பத்தையும் அடையலாம். ஆண்தன்மை அளிப்பதில் இந்த மதன சஞ்சீவி லேகியம் முதன்மை பெற்றது. உஷ்ண சம்பந்தமான வியாதிகளையெல்லாம் கண்டித்து விசேஷ தாதுப்புஷ்டி அளிக்க அபார சக்தி வாய்ந்தது.

சேர் 1-க்கு ரூ. 2-8-0

## வஸந்த குஸுமாகர லேகியம்

மூல வியாதிக்கு கைகண்ட அரிய ஔஷதம். வயிற்று வலி, மூத்திர சம்பந்தமான கோளாறுகள், பெண்களுக்குண்டாகும் எல்லாவித சூதக, வயிற்று வலிகள், குழந்தைகளுக்கும், பெரியவர்களுக்கும் லிவர் சம்பந்தமாக ஏற்படும் கோளாறுகளையும் மலச்சிக்கலையும் போக்கி திரேகத்துக்கு ஆரோக்கியத்தைத் தர ஒரு அமிர்தம் போன்றது.

1 சேர் விலை ரூ. 6 தான்.

## மஹா சஞ்சீவினி தைலம்.

இந்தத் தைலம் 25 வயதுக்குட்பட்ட ஆண் பெண் யாவருக்கும் ஏற்படும் வெட்டைச்சூட்டு நிமித்தம் தலையில் கிரந்திப்புண்கள் ஏற்பட்டு தலைமயிர் விழுந்தும், கண் பார்வை குறைதல், செவிடு முதலிய வியாதிகள் உண்டாவதைத் தடுப்பதில் ஒரு வரப்பிரசாதம்போன்றது. இந்தத் தைலத்தை வாரம் இருமுறை தலைமுழுகி வந்தால் சூரியனைக்கண்ட பனியைப்போல ஷை வியாதிகள் குணமாவதுடன் தலையில் மயிர் முளைத்து சரீரத்திற்கு தேஜஸையும், காந்தியையும் கொடுக்க வல்ல அபார சக்திவாய்ந்தது. (ஒரு கோர்ஸ் 3 மாதம்).

3 மாதம் தலைமுழுக 16 அவுன்ஸ் பாட்டல் 1க்கு ரூ. 9 0 0

3 மாதத்தில் குணமாகாவிடில் பணம் வாபஸ் தரப்படும்.

ஆர்டருடன் பாதிப்பணம் அட்வான்ஸாக அனுப்பவேண்டும்.

## இளநீர்க் குழம்பு

கண் நோய், கண் நீர் வடிதல், கண் எரிச்சல், மாலைக்கண், தலைவலி, தூக்கமின்மை முதலிய கண் சம்பந்தமான எல்லா வியாதிகளுக்கும் குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரையிலும் உபயோகிக்கவல்லது.

¼ அவுன்ஸ் விலை ரூ. 0-8-0

## ஸாரஸ்வதா ஆயிண்ட்மேண்ட்

மேகப்படைகள். கட்டிகள். புண்கள், வீக்கம், வலி, சிலந்திப் புண்கள் முதலிய எல்லாவிதமான நாட்பட்ட வியாதிகளுக்கும் மணிக் கணக்கில் குணமளிக்கவல்ல அபார சக்தி வாய்ந்தது.

விலை 1 அவுன்சுக்கு விலை ரூ. 0-12-0

## பிருங்காமலகா தைலம்

நித்திரையின்மையைப் போக்கடிக்கும். கண்களைக் குளிர்ச்சிபடுத்தும். நரைத்த மயிரை கறுப்பு வர்ணமாக மாற்றி வளரச் செய்யும். மூளை வேலை செய்பவர்களுக்கும், சஞ்சலம், சிந்தனை, மனோ வேதனையுள்ளவர்களுக்கும் நிம்மதியான குணத்தைச் செய்யும்.

6 அவுன்ஸ் புட்டி 1-க்கு ரூ. 1-2-0

பிராஞ்சு :—கேரளா மெடிகல் ஸ்டோர்ஸ்,
35, வெங்கடமேஸ்திரி தெரு, G. T., மதராஸ்.

